# ஒரு வருட சோதனை — உற்சாகமளிக்கிறது


# ஜனசக்தி

இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டுக் கமிட்டியின் வாரப் பத்திரிகை

மலர் 2 இதழ் 24 | புதன்கிழமை 15—3—44 | விலை 2 அணா


## ஆனால் . . . .

## உறங்குவதற்கில்லை

ஒரே இருட்டடிப்பு! பத்திரிகைகளில் வங்காளத்தைப்பற்றி ஒரே இருட்டடிப்பு! ஏன்? பஞ்சம் ஒழிந்துவிட்டதா? "நிலைமை சீர்திருந்திவிட்டது. இனி பயங்கரமான செய்திகளைப் பிரசுரிக்க வேண்டியதில்லை" என்பது அதிகாரவர்க்கத்தின் எண்ணம். ஆனால் எந்த உண்மையான பத்திரிகைக்காரனும் இதை உண்மை என்று ஒப்புக்கொள்ள முடியாது. எனினும் அதிகாரவர்க்கம்தான் ஜெயித்திருக்கிறது. வங்கச் செய்திகள் கொட்டை எழுத்துக்களில் பிரசுரிக்கப்படுவதில்லை; அதனால் இதர மாகாணத்தில் இருக்கும் தேசபக்தர்களால் உண்மையை அறிந்துகொள்ள முடியவில்லை.

அறியாமை மனிதனின் உயர்ந்த தன்மையை வெளிப்படுத்துவதில்லை; தாழ்ந்த குணத்தையே அம்பலத்திற்குக் கொண்டு வருகிறது. இப்பொழுது இதுதான் நடந்து வருகிறது. வங்க நிவாரண நிதிக்காக நம் தோழர்கள் தேசபக்தர்களை அணுகுகிறார்கள். இப்பொழுது அவர்கள் கொண்டுவரும் ரிப்போர்ட்கள் விநோதமாக இருக்கின்றன. "வங்க நிவாரணத்தில், ஆரம்பத்தில் காட்டியது போல் தேசபக்தர்கள் ஊக்கம் காட்டுவதில்லை; மனச்சோர்வையே பிரதிபலிக்கின்றனர்" என்று நம் தோழர்கள் கூறுகிறார்கள்.

ராம்மோஹன்ராய் பிறந்த வங்காளத்திற்கு—தாகூரின் பூமிக்கு—பங்கிமின் தேசத்திற்கு—கொஞ்சம் பணம் கொடுத்துவிட்டால் போதும்; அப்பேரறிஞர்களுக்கு நாம் செலுத்தவேண்டிய காணிக்கையை செலுத்திவிட்டவர்களாவோம் என்று எண்ணுகின்றனர் போலும்! அவர்களுடைய வீட்டுவாசலில் பஞ்சப்பேய் நர்த்தனமாடுவதைத் தடுக்க, வங்கத்திற்கு உதவுவது சரியான வழியல்ல என்று நினைக்கின்றனர் போலும்! "வங்கத்திற்கு நாங்கள் அப்பொழுதே பணம் கொடுத்து விட்டோமே!" என்று சிலர் கூறுகிறார்கள்!

"ஏன் தோழரே! எங்களை தொந்தரவு செய்யறீங்க? போதுமானதை நாங்கள் கொடுத்துடவில்லையா? நீங்கள் என்னவோ, நிலைமை இன்னும் மோசமென்றே கூறுகிறீர்கள். வங்காளிகள் அவர்களுக்குள்ளே ஒத்தாசைபண்ணிக் கொள்ளாவிட்டால், எவ்வளவு நாளைக்கு மத்தவங்க உதவமுடியும்?" என்று மற்றும் சிலர் கேட்கிறார்கள்.

### குறைந்த உதவி

இவ்விதம் பேசிவிடுவது சுலபம். "நம்ம கடமையை செஞ்சுட்டோம்" என்று நாமே திருப்தியடைய உகந்த வாதம். ஆனால் கொஞ்சம் கணக்குப்போட்டுப் பார்த்தால், அந்த வாதத்தின் குட்டு வெளிப்பட்டுவிடும். வங்க நிவாரணத்திற்காக வங்கத்திற்கு வெளியே எவ்வளவுரூபாய் வசூலிக்கப்பட்டது! ஒரு கோடி ரூபாய்கூட இல்லை. ஆனால் ஆறு கோடி வங்கமக்கள் ஆறுமாதகாலம் பஞ்சத்தால் பரிதவித்திருக்கிறார்கள். இதிலிருந்து என்ன தெரிகிறது? வெளிமாகாணங்களிலிருந்து சென்ற உதவிமட்டும் வங்கமக்களைக் காப்பாற்றி விடவில்லை. பெரும்பாலும் அவர்களுடைய சுயமுயற்சியாலே அவர்கள் பஞ்சத்தை சமாளித்திருக்கிறார்கள்.

வங்க தேசபக்தர்கள்! ஒருவருடகாலமாகப் போராடினார்கள்; இன்னும் போராடுகிறார்கள். ஆறுமாதகாலமாக இதர இந்தியர்கள் அவர்களுக்கு உதவினார்கள். ஏன்? அநேகர் இன்னும்கூட உதவுகிறார்கள்.

கூட்டுப் போராட்டம்! பஞ்சத்தை எதிர்த்துக் கூட்டுப்போராட்டம்! இதுதான் 1943-ம் வருஷத்திய பெரிய நிகழ்ச்சி. நம்முடைய புராதன தேசம், தன்னுடைய நீண்டவாழ்வில் எத்தனையோ ஆக்க முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறது. அவற்றுள் அதி முக்கியமானவைகளில் ஒன்றாக, நம் தேசிய இயக்க சரித்திர ஆசிரியர்கள் இதைப் போற்றிப் புகழ்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

வங்கம் காக்க நடத்திய பெரும் போராட்டத்தில் அடைந்த லாபங்களைப் பார்ப்போம்.

### I

### விளம்பரமில்லா வீரம்

வங்காளம்! நமது எல்லை மாகாணம்; ஜப்பானின் அணிக்கு அருகில் இருக்கும் மாகாணம்; காப்பாற்றப்பட்டது! அராஜகத்தினின்றும் காப்பாற்றப்பட்டது!!

குறைந்தபக்ஷம் மூன்று மாதங்கள் வரை—1943 அக்டோபரிலிருந்து டிசம்பர் வரை—ஒரு கோடி அனாதைகள் இருந்தனர். எனினும் கோரமான கலகங்கள் எதுவும் நடைபெறவில்லை. சர்க்கார் உணவளித்த அனாதைகளின் எண்ணிக்கை 22 லக்ஷம். அதற்கடுத்தபடியாக பெரிய நிவாரண விடுதியை நடத்தியவர் டாக்டர் சியாம்பிரசாத் முகர்ஜி. அந்த விடுதியினர் உணவளித்த அதிகபக்ஷ அனாதைகளின் எண்ணிக்கை 4 லக்ஷம். ஆக மொத்தம் 26 லக்ஷம். அதாவது 4 அனாதைகளில் ஒருவனுக்கு உணவளிக்கப்பட்டது. அப்படி இருக்கும்போது மீதமுள்ள 75 லக்ஷம் அனாதைகளும் ஏன் சூறையாடக் கிளம்பவில்லை! ஏனெனில் அண்டை வீட்டார்கள், தங்களால் முடிந்தவரை அவர்களுக்கு உதவி புரிய தயாராக இருந்தனர்.

பட்டினியால் வாடும் தங்கள் அண்டை வீட்டினரைக் காப்பாற்றுவதற்காக, கிராமத்தில் வாழும் சாதாரண ஆடவரும், பெண்டிரும் செய்த தன்னலத் தியாகங்கள் எழுத்தில் அடங்கவில்லை. ஏனெனில் நம் கருத்தில், பெருமைப்படுத்தக் கூடிய அவ்வளவு பெரிய காரியமாக அவற்றை நாம் எண்ணவில்லை; ஒரு மனிதன் இன்னொருவனுக்கு ஆற்ற வேண்டிய கடமையாகவே கருதப்பட்டது. ஒவ்வொரு நகரத்திலும் மத்திய தர வர்க்கத்தைச் சேர்ந்த சாதாரண குடும்பங்கள், தங்களால் முடிந்த வரை அன்னசாலைகளை நடத்தினார்கள்; தங்களுடைய வீட்டுத் திண்ணையில் சோறு போட்டார்கள்; உற்சாக மேலீட்டால் வங்கச் சிறுவர்கள் எவ்வளவோ பெரிய காரியங்களை செய்திருக்கிறார்கள்.

லக்ஷக்கணக்கான பசித்த வங்க மக்கள் திடீரென்று சூறையாடுவதற்குக் கிளம்பிவிடவில்லை. நம் புராதன நாகரீகத்தின் பெருமைதான் என்ன! கிராமாந்திர மக்களிடம் இருக்கும் சமூக உணர்ச்சியை நாம் போற்றவேண்டும். ஒரு கோடி வங்காளிகள்! பசி குடலைத் தின்கிறது! யாராலும் சூறையாடும்படி ஆத்திர மூட்ட முடியவில்லை. ஏன்? ஆறு கோடி பேர்களில் அநேக லக்ஷம் பேர்கள் பெரும் முயற்சி எடுத்துக்கொண்டனர்; தங்களால் முடிந்ததையெல்லாம்

**பி. ஸி. ஜோஷி**

செய்ய முன் வந்தனர். அரசியல் ஸ்தம்பிப்பு இருந்த போதிலும் நம் பிக்கைக்கு பாத்திரமான தலைவர்கள் சிறைகளில் கிடந்த போதிலும்—அத்தகைய பகிரத முயற்சியை எடுத்து சாதிப்பதற்கு முடிந்த, வங்க மக்களின் தேச பக்திக்கு நாம் மரியாதை செலுத்த வேண்டும்.

சர்க்கார் கணக்குப்படி 10 லக்ஷம் பேர்கள்; மற்றவர்களுடைய கணக்குப்படி 50 லக்ஷம் பேர்கள் மடிந்தனர். மற்ற வங்காளிகள் எவ்விதம் தப்பினார்கள்? அவர்களுடைய தேச பக்தி அவர்களைக் காப்பாற்றிற்று.

### திட்டம் சிதறியது

"புரட்சி! புரட்சி!!" என்று ஜப்பான் ரேடியோ மூலம் போஸ் ஊளையிட்டுக்கொண்டிருந்தார் "பஞ்சம் வலுத்துவிட்டதால், உணவுக் கலகத்தைத் தவிர்க்க முடியாது; அதனால் "புரட்சிகரமான" கொந்தளிப்பு ஏற்படும்; போஸின் இராணுவம் அணிவகுத்து உள்ளே நுழையும்போது, அந்தக் கொந்தளிப்பு வெற்றியாக மலரும்" என்று போஸின் ஆட்கள் பேசிக்கொண்டும், திட்டமிட்டுக்கொண்டுமிருந்தனர். ஆனால் இதில் மண்ணைவாரிப் போட்டது! வங்க விவசாயிகளின் சமூக உணர்ச்சியும், சகோதர சகோதரிகளின் தேசபக்தி மிக்க சேவையும் இந்த ஐந்தாம்படையின் திட்டத்தில் மண்ணைவாரிப் போட்டது.

இப்போது பார்வேட் பிளாக்கர்கள் என்ன செய்கிறார்கள்! "சுத்தப் பயங்கொள்ளிகள்" என்று ஜனங்களைத் திட்டிவிட்டு, போஸின் "விடுதலை" சேனையை எதிர்பார்க்கிறார்கள். அதுதான் இன்று அவர்களுக்கு முடியும். போஸின் கூட்டாளிக் கட்சி ஒன்று இருக்கிறது, அதன் பெயர் "புரட்சிகரமான சோஷியலிஸ்ட் கட்சி". இப்பொழுது அவர்கள் என்ன செய்கிறார்கள் தெரியுமா? ஜப்பான் சிநேகத்தின் மூலம் "சுதந்திரப் புரட்சி நடக்கும்" என்பதில் இருந்த நம்பிக்கையையெல்லாம் மூட்டை கட்டி வைத்துவிட்டு, "யுத்தம் முடிந்த பின் புரட்சி" என்ற புது சித்தாந்தத்தை விளம்பரப்படுத்தி வருகிறார்கள். வங்கத்தில் இருக்கும் போஸின் ஆட்கள் என்ன பேசிக் கொள்ளுகிறார்கள் என்பதையும், போஸ் என்ன பிரசாரம் செய்கிறார் என்பதையும் ஒருவர் நன்கு கவனித்தால் கீழ்கண்ட முடிவிற்கு வருவார்கள்:—

தலைவர் பெருமான்தான் முதலில் "விடுதலை" சேனையுடன் வரவேண்டும் என்று சிஷ்யர்கள் கூறுகிறார்கள். சிஷ்யர்கள்தான் முதலில் புரட்சியை ஆரம்பிக்க வேண்டும் என்று தலைவர் பெருமான் கூறுகிறார். ஐயோ பாவம்! இந்த நிலைமைக்கு . இந்தக் கூட்டத்தினரை யார் கொண்டு வந்தார்கள்! மக்களின் தேச பக்தி!

### II

### குட்டு வெளிப்பட்டது

உணவுப் பிரச்சினையில் ஒரு விதமான திட்டத்தையும் உறுதியுடன் கையாளாத சர்க்காரை, குறிப்பான உணவுக் கொள்கையை அனுஷ்டிக்கும்படி வங்கப் பஞ்சம் நிர்பந்தித்தது.

வங்கத்தில் பஞ்சம் தலை தூக்கியது; அதை சமாளிக்க சர்க்கார் கொஞ்சங்கூடத் தயாராக இல்லை. "பஞ்சமே இல்லை" என்று ஆரம்பத்தில் மறுக்கக்கூட முயற்சித்தது. ஆனால் செய்தி இந்தியா பூராவும் பரவிவிட்டது; எங்கும் நிவாரண இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது; உலகமெங்கும் சர்க்காரின் மானம் சந்தி சிரித்தது. நேச நாட்டு மக்கள் நிர்பந்திக்க முற்பட்டனர். அப்பொழுதான் புது டில்லி அதிகார வர்க்கம் ஒரு முடிவிற்கு வரும்படி நிர்பந்திக்கப்பட்டது; ஒரு உணவுக் கொள்கையை வரையறுக்கும்படி செய்யப்பட்டது. விலைக் கட்டுப்பாடு, ரேஷனிங், ஸ்டாக் கன்ட்ரோல் போன்றவைகளைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்தது. யுத்தம் ஆரம்பித்த உடனேயே எந்த அறிவுள்ள சர்க்காரும் அந்த முடிவுகளைக் எடுத்திருக்கும்.

உணவுக் கொள்கையை ஒப்புக்கொண்டதைத் தவிர, சர்க்கார் ஒன்றும் அதிகமாக செய்துவிடவில்லை. அத்தகைய உணவுக்கொள்கையைப் பலன் கொடுக்கக்கூடிய முறையில் தேசிய சர்க்கார்தான் அமுல் நடத்த முடியும். அதனால்தான் திரும்பவும் வங்காளத்தில் அரிசி விலை ஏறிக் கொண்டிருக்கிறது. போன வருஷம் இதே காலத்தில் இருந்ததைவிட, ஒவ்வொரு மாகாணத்திலும் அதனால்தான் உணவுப் பொருள்களின் விலை ஏறிக் கொண்டிருக்கிறது.

ஆனால் அந்தக் கொள்கையை எவ்வளவு கொஞ்சமாக சர்க்கார் நிறைவேற்றியிருந்தபோதிலும், அந்தக் கொள்கையினால் மற்ற மாகாணங்களும் வங்கம் சென்ற வழியில் செல்லாமல் 1943-ல் காப்பாற்றப்பட்டன.

இரண்டாவது பஞ்சத்தை எதிர்நோக்கி வங்கம் நிற்கிறது; 1943-ல் வங்கத்தில் எப்படி விலைவாசி உயர்ந்ததோ அதே போல் இந்தியாவின் மற்ற பாகங்களில் இன்று விலைவாசி உயர்ந்து கொண்டிருக்கிறது; எவ்வளவு தூரம் இந்த சர்க்கார் தான் பிரகடனப்படுத்திய கொள்கையையே நிறைவேற்ற முடியாத நிலையில் இருக்கிறது என்பதை நிரூபிக்க இதுவே போதும்.

உணவுக் கொள்கையைக் கொண்டில்லாத சர்க்காரை 1943-ம் வருடம் உலகில் சந்தி சிரிக்கவைத்தது என்றால், அந்த சர்க்கார் தீர்மானித்திருக்கும் உணவுக் கொள்கையை அதனாலேயே நிறைவேற்ற முடியவில்லை என்பதை 1944-ம் வருடம் விளம்பரப்படுத்தும்.

கள்ள சேமிப்பாளர்களிடமிருந்து பாதுகாத்தால்தான் நம் உணவு பத்திரமாக இருக்கும். அதாவது 1943-ம் வருடம் வங்க மக்கள் எதைச் செய்யத் தவறினார்களோ அதை நாம் இன்று செய்ய வேண்டும். இந்த உணர்வு பொது உணர்வாகி வருகிறது. பிரிட்டிஷ் சர்க்காரின் தலையைச் சீவும் வண்ணம் உலக முற்போக்கு அபிப்பிராயத்தை வங்கப் பஞ்சம் கொண்டு வந்தது. தேசிய சர்க்கார் இல்லாவிட்டால் இந்தியாவே பஞ்சத்தில் மூழ்கிவிடும் என்பதை, இந்தியா பூராவும் நிலவும் உணவு நெருக்கடி அவர்களை உணரச் செய்கிறது.

### III

### தேசபக்தியின் மறுமலர்ச்சி

வங்கத்திற்கு ஏற்பட்ட கதி, ஒவ்வொரு இந்தியனின் உள்ளத்திலும் தேச பக்தியைத் தூண்டிவிட்டது; தேச பக்தி மறு மலர்ச்சி ஏற்பட்டது. 1942-ம் வருடம் ஆகஸ்ட் 9-ம் தேதிக்குப் பின் ஏற்பட்ட மனச்சோர்வு பூராவும் "ஒன்றுஞ் செய்ய முடியாது" என்ற மூன்று வார்த்தைகளில் அடிக்கடி திருப்பிச் சொல்லப்பட்டது. 1943 ஆரம்பத்தில் இருந்ததுபோல், தேச பக்தி உணர்ச்சி என்றுமே அவ்வளவு கீழாக இருந்ததில்லை.

வங்காள தேச பக்தர்களின் தேச பக்தியை, நிவாரண இயக்கத்திற்காக, பஞ்சம் தூண்டிவிட்டது.

தேசபக்தர்கள் நிவாரணத் தொண்டர்களாக மாறினார்கள்; எவ்வளவு கஷ்டத்தைப்பட முடியுமோ. அவ்வளவு கஷ்டத்தைத் தங்களுடைய சொந்த மக்கள் படுவதைப் பார்த்தார்கள். அவர்களுடைய மனதில் புதிய அன்பு சுரந்தது; மக்கள் மேல் புதிய நம்பிக்கை பிறந்தது. அவர்களிடத்தில் ஏற்பட்டிருக்கும் இந்த மாறுதல் அவர்களுக்கே தெரியாது. ஏனெனில் இரண்டாவது பஞ்சம் வந்துவிடுமோ என்ற எண்ணத்தில் அவர்கள் ஆழ்ந்து கிடக்கிறார்கள்.

வங்கத்திற்கு வெளியே இருக்கும் தேசபக்தர்கள் பணம் வசூலிப்பவர்களாக மாறினார்கள். மக்களிடம் போய் விஷயத்தை விளக்கும்போது, தங்களுடைய மக்கள் மனச்சோர்வடையவில்லை என்பதை அவர்கள் பார்த்தார்கள். அவர்கள் எதிர்பார்த்ததை விட, ஒவ்வொரு தடவையும் அதிகமாக பணம் வசூலித்தனர். வங்கத்தைக் காக்க, வெகுதூரத்திலுள்ள மக்கள் உதவுவதை—தங்கள் கூடப் பிறந்தவர்களைப்போல் உதவுவதை—அவர்கள் பார்த்தார்கள். தங்களுடைய ஜனங்களிடம் ஒரு புதிய நம்பிக்கையும், அன்பும் அவர்கள்பால் தோன்றிற்று.

வங்கத்திலும் சரி, வங்கத்திற்கு வெளியிலும் சரி, தேசபக்தர்கள் 1944-ம் வருடத்தில் தெளிந்த உணர்வோடும் உறுதிபெற்ற உள்ளத்தோடும் இருக்கிறார்கள். ஏதோ கொஞ்சம் செய்துவிட்டோம் என்று அவர்கள் மனம் திருப்தியடைகிறது; அதைத் தொடர்ந்து இயற்கையாகவே அவர்கள் உள்ளத்தில் "நாம் செய்ததுபோதுமா?" என்ற கேள்வி எழுகிறது.

போஸின் ஆட்கள் தனிமைப்படுத்தப்பட்டனர். நிறைவேற்ற முடியாவிட்டாலும் ஒரு உணவுக்கொள்கையை அனுஷ்டிக்கும்படி சர்க்கார் செய்யப்பட்டது; நமக்கு நம்முடைய சக்தியிலும் ஜனங்களிடத்திலும் அதிக நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது. வங்கம் காக்க நாம் ஆற்றிய பொதுப் போராட்டத்தில் நாம் அடைந்த நிகர லாபங்கள் இவை.



பூரண சந்திர ஜோஷி

ஜன சக்தி

தந்தி விலாசம் "ஜனசக்தி" டெலிபோன் நெ. 3887

வருட சந்தா ரூ. 5. 6 மாதம் ரூ 3. 3 மாதம் ரூ 1-8-0.

# மகத்தான மகாநாடு

அகில இந்திய கிசான் சபை என்பது இந்திய விவசாயிகளுடைய சங்கம். கிசான் என்றால் விவசாயி என்று பொருள். ஐந்து லக்ஷம் அங்கத்தினர்களைக்கொண்ட ஸ்தாபனம். எல்லா மாகாணங்களிலும் பரவியுள்ளது. கோடிக்கணக்கான இந்திய விவசாயிகளின் லக்ஷியத்தைப் பிரதிபலிக்கக் கூடியதும் அவர்களுடைய கொள்கையை நிர்ணயிக்கக் கூடியதுமான ஒரே ஸ்தாபனம், **அகில இந்திய கிசான் சபை.**

தேசீய இயக்கச்சுடரில் தோன்றியதீப்பொறி கிசான் சபை. அதன் எட்டாவது மகாநாடு இவ்வருடம் ஆந்திர மாகாணத்தில் பெஜவாடாவில் இந்த வாரத்தில் நடைபெறுகிறது.

ஆந்திர விவசாயிகளின்தேசபக்தி சரித்திரப்பிரசித்தி வாய்ந்தது. தங்கள் மகாநாட்டை வெற்றிபெற நடத்தி தங்களுடைய ஒற்றுமையும், அமைப்புத் திறமையும், தியாக உணர்ச்சியும், தேசம் பூராவும் பரவுமாறு, உறுதிகொண்டு எழுந்தனர். வீடுவீடாக கிராமம்கிராமமாக பாலர்கள், ஆண்கள் அனைவரும் ஒருங்கே திரண்டனர். ஒரு லக்ஷம் பேர்கள் கூடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. பல கண்காக்ஷிகளும், கலாநிகழ்ச்சிகளும்கூட நடைபெறுகிறதாம். இந்த ஏற்பாடுகள் அகில இந்திய காங்கிரஸ் மகா சபையின் வருடாந்திர மகாநாட்டின் ஏற்பாடுகளை நினைவூட்டுகின்றன.

இவற்றையெல்லாம் பார்த்தவுடன் தேசீயத்தை நசுக்கிவிட்டதாக மனப்பால் குடிக்கும் அதிகாரவர்க்கத்திற்கு ஆத்திரமூண்டது. கிசான் மகாநாட்டிற்கு ரயிலிலும் பஸ்ஸிலும் பிரயாணம் செய்வதைத் தடைசெய்தது. கண்ணடியை ஒளித்து வைப்பதனால் கல்யாணம் நின்று போய் விடுமா?

பெஜவாடாவை நோக்கிச் செல்லும் ரோடுகளிலெல்லாம், வண்டிகளிலும், நடந்தும் விவசாயிகள் சாரிசாரியாக மகாநாட்டிற்குச் செல்கின்றனர். பெஜவாடாவுக்கருகில் ஓடும்கிருஷ்ண நதியும் படகுகளில் விவசாயிகளைக்கொண்டு வந்து சேர்த்தவண்ணமாயிருக்கிறது. அதிகாரவர்க்கத்தின் தடை உத்தரவும் பயன்படாமற்போகவே, தாயைக்கூட விற்கத்தயங்காத ஒரு சிலர் பொறுமையும் ஆத்திரமுமடைகின்றனர். சில தமிழ் பத்திரிகைகள்கூட விஷயத்தை ஒன்றுகிடக்க ஒன்று வாய் புளித்ததோ, மாங்காய் புளித்ததோ என்று எழுதுகின்றன. ஒன்று ஆங்கிலம் புரியாமலிருக்கவேண்டும். அல்லது விஷம புத்தியாக இருக்கவேண்டும்.

விவசாயிகள் சங்கம் இவ்வளவு பலம்பொருந்தியதாக வளர்ந்து வருவதைக்கண்டு திகிலடைந்த இக்கூட்டத்தினர் கம்யூனிஸ்டு பூச்சாண்டியை கிளப்பிவிட்டிருக்கின்றனர். கிசான் சபையில் கம்யூனிஸ்டுகள் ஆதிக்கம் செலுத்துவதாகக் கூக்குரல் போடுகின்றனர். "விவசாயிகளின் முன்னேற்றத்திற்காக கம்யூனிஸ்டுகள் உழைக்கிறார்கள். இதைத் தவிர அவர்கள் கிசான் சபையில் ஆதிக்கம் செலுத்துவதாகச் சொல்லுவது பிசகு" என்று கிசான் சபைத் தலைவர் **சுவாமி சகஜானந்தர்** கூறுகிறார்.

தொழிற்சங்கங்களில் சேவை செய்வதுபோல், கம்யூனிஸ்டுகள் கிசான் சபையிலும் சேவை செய்கிறார்கள். இந்த வர்க்கஸ்தாபனங்களை பலம் பொருந்தியதாகச் செய்து, தொழிலாளர், விவசாயிகளின் அன்றாடக் குறைகளுக்காகவும் தேசிய லக்ஷியங்களுக்காகவும் பாடுபடுகின்றனர். ஆகவே தொழிலாளர்களும், விவசாயிகளும் கம்யூனிஸ்டுகளை ஆதரிக்கின்றனர். இது தொழிலாளர்களிடையேயும், விவசாயிகளிடையேயும் ஏற்பட்டுவரும் அரசியல் விழிப்பையும் வளர்ந்துவரும் சுதந்திர ஆர்வத்தையும் காட்டுகின்றது. இந்தப் பொதுஜன ஸ்தாபனங்கள் ஜனநாயக பூர்வமாக நடைபெறுவதையும் காட்டுகிறது. உயர்ந்த உண்மையான தேசபக்தி அடிப்படையில் விவசாய ஸ்தாபனங்களும், தொழிலாளர் ஸ்தாபனங்களும் சுயேச்சையாகத் தங்கள் கொள்கையையும், வேலைத்திட்டத்தையும் வகுக்கின்றன. சுதந்தரத்தை விரும்பும் ஒவ்வொருவரும் வரவேற்கவேண்டிய விஷயம். தொழிலாளரையும் விவசாயிகளையும் அறியாமையில் வைத்து அவர்களிடையே தங்களது சுயநலக் கொள்கையை பரப்பி வாய் வீச்சான பேச்சுகளைப் பேசி, அரசியல் வேட்டையாட முடியவில்லையே என்று சில உருத்திராக்ஷப் பூனைகள்தான் இம்மாதிரி விஷமப் பிரசாரத்திலிறங்குகின்றன. தேசபக்தியும் தொழிலாள விவசாய வர்க்கங்களுக்கு சேவை செய்யும் ஆர்வமும் உடைய, யோக்கியப்பொறுப்பான யாவரும் கம்யூனிஸ்டுகளிடத்தில் முட்டிக்கொள்ள வேண்டியதில்லை. கம்யூனிஸ்டுகளைத் தாக்குகிறோம் என்ற போர்வையில் சில வேஷதாரிகள் விவசாயிகளின் ஸ்தாபன வளர்ச்சியையே தாக்குகிறார்கள். இந்த முறையில் மறைமுகமாய் தெரிந்தோ தெரியாமலோ ஏகாதிபத்தியத்திற்குத்தான் தொண்டுபுரிகிறார்கள். ஆனால் விவசாயிகளும் பொது ஜனங்களும் இதனால் ஏமாறப்போவதில்லை.

இன்று பெஜவாடா மகாநாட்டில், தேசபக்தி நிறைந்த விவசாயிகளும் அவர்களது பிரதிநிதிகளும் கூடுகிறார்கள். நமது நாடு ஒரு விவசாயநாடு. நீர்வளம் நிலவளம் நிறைந்த புனிதமான பூமி. தேசபக்தியும் தியாக உணர்ச்சியுமிகுந்த விவசாயிகள் நமது நாட்டை வற்றாத அக்ஷய பாத்திரமாக்கி நம் மக்களை பஞ்சத்தினின்று மீட்க வழிதேடுவார்கள். மக்களுக்காக அவர்கள் உற்பத்தி செய்யும் உணவுப் பொருளை மறைத்துவைத்து ஒரு சிலர் கள்ள வியாபாரம் பண்ணி கொள்ளையடிக்க விடமாட்டார்கள். அரசியல் முட்டுக்கட்டையைத்தவிர்த்து பொதுஜனப் பொறுப்புள்ள தேசீய சர்க்கார் அமைக்க நடைபெறும் இயக்கத்தில் தங்களுக்கு உரியபங்கைஎடுத்து, நம்நாட்டை பஞ்சத்தினின்று மீட்டு, சுதந்திர உலகில் சுதந்திரத்துடன் திகழ வழிகாட்டும் பெஜவாடா விவசாயிகள் மகாநாடு.

## குறிப்புகள்

# ★ இந்திய சர்க்காரின் பட்ஜெட்

### —மக்கள் வயிற்றில் அடி

# ★ வியாபார சபைத் தீர்மானங்கள்

### —அதிகாரவர்க்கத்தின் குட்டு அம்பலத்தில்!

V. ராதாகிருஷ்ணன்

மத்திய சட்டசபையில் பிப்ரவரி 29ந் தேதியன்று இந்திய சர்க்காரின் நிதி மெம்பர் ஸர். ஜெரிமி ரெய்ஸ்மென் 1944–45 வருடங்களுக்கு மத்ய சர்க்காரின் பட்ஜெட்—வரவு செலவுத் திட்டத்தை சமர்ப்பித்தார். அத்திட்டம் நமக்கு தெளிவாகக் காட்டியதென்ன? இந்திய அரசியல் ஸ்தம்பிப்பை நீடிக்கும் சர்க்காரின் கொள்கை, ஜனங்களிடமிருந்து சர்க்கார் ஒதுக்கப்பட்டுக் கிடக்கும் நிலைமை, யுத்தத்தை நடத்துவதற்கு அவசியமான பொருளாதார, நிதி வசதி, முதலியவைகளில் அதிகாரவர்க்கம் படும் திண்டாட்டம், அதற்காக பாமர மக்களின் தலையில் கைவைக்கும் கொள்கை அனுஷ்டிப்பு—ஆகிய இவைகளையே கண்டோம்.

### 3 மடங்கு அதிக வரி

இந்த 44–45 வருடங்களுக்கு தற்காப்புச்செலவு ரூ. 276 கோடியாகுமென ஜெரிமி திட்டமிட்டிருக்கிறார். சென்ற வருடம் தற்காப்புச் செலவு 262 கோடி ரூபாய். இவ்வருடம் 15 கோடி ரூபாய் அதிகம். சாதாரணமாக சமாதான காலத்தில் இராணுவச் செலவு, ரூ. 36 கோடிதான்.

1939-40ல் வரிகள் மூலமாக மத்ய சர்க்காருக்குக் கிடைத்த வருமானம் ரூ 8? கோடி. ஆனால் வருகின்ற வருஷத்தில் சுமார் ரூ 285 கோடி ரூபாய் வருமென எதிர்பார்க்கப்படுகிறது.

அதாவது யுத்தத்திற்கு முன்னைய தொகையைக் காட்டிலும் சுமார் 3 மடங்கு அதிகம். உதாரணமாக யுத்தத்திற்கு முன்னால் ஒருஆள் 2ரூபாய் வரி கொடுத்தானானால் இந்த பட்ஜெட்டின்படி ரூ. 7 வரி கொடுக்கவேண்டிய நிலைமை.

இதிலிருந்து நமக்குத் தெரிவதென்ன? யுத்தத்தை நடத்துவதற்காக தேசத்தின் செல்வத்தைப் பெருக்கி அதனால் சர்க்கார் வருமானம் பெறுவதற்கு பதிலாக மேலும்மேலும் பொதுஜனங்கள் தலையிலேயே கையை வைத்து அவர்களிடம் அதிக வரிகள் போட்டு வசூல்செய்து சரிக்கட்டுவதென அதிகாரவர்கம் நினைத்துக்கொண்டிருப்பதையே இது காட்டுகிறது.

### ஜன விரோதம்!

தேசத்தின் செல்வத்தைப் பெருக்குவது எங்ஙனம்? தேசத்தில் பெரிய தொழிற்சாலைகளை ஏற்படுத்தி, இயந்திர உற்பத்தியை அதிகப்படுத்தி, பொருள்களை அதிகமாக உற்பத்தி செய்வதன் மூலமே அது சாத்யம்.

ஆனால் அதற்கு பதிலாக அதிகாரவர்க்கம் யுத்தத்தை நடத்த அபாயகரமான வழியில் சென்றுகொண்டிருக்கிறது. மக்களின் பூர்ண ஆதரவு பெறாமல் மக்களுக்கு விரோதமாகவே காரியங்கள் செய்து வருகிறது.

கடந்த 4 வருடங்களாக அதிகாரவர்க்கம் அனுஷ்டித்து வந்த கொள்கை அரசியல் நெருக்கடியுடன் தேசத்தில் பெரிய பொருளாதார நெருக்கடியையும் ஏற்படுத்தியுள்ளது! இதனால் தேசத்தற்காப்பே பலஹீனமடைந்துள்ளது. இந்தக் கொள்கையின் விளைவு தேசீய வருமானத்தை—தேச மக்களின் வருமானத்தை பெரிய அளவுக்குக் குறைத்துள்ளது, தேசத்தில் ஏழ்மையையும், பஞ்சத்தையுமே எங்கும் விளைவித்துள்ளது.

### மக்கள் வயிற்றில் அடி!

ஆயினும் இன்னும் அதிகார வர்க்கம்—ஏழை மக்களைப் பெரிதும் பாதிக்கும் முறையிலேயே—புகையிலை, டீ, காபி, பாக்கு முதலியவைகள் மீது புதிய-அதிக வரி விதித்துள்ளது. கேவலம், காபி, டீ, பாக்கு முதலியவைகளுக்கும் கூட வரி விதிக்கும் மோசமான நிலைமைக்கு இந்திய சர்க்கார் வந்துவிட்டது. இதுவரையிலும் இந்தியாவின் சரித்திரத்திலேயே எந்த சர்க்காரும் பாக்குக்கு—ஏழை ஜனங்களின் பாக்குக்கு—வரிவிதிக்க முன்வந்ததில்லை.

இந்த வரிகளெல்லாம் பொது ஜனங்களைத்தான் பாதிக்கும். வியாபாரிகள் தாங்கள் வரி கொடுக்கும் அளவிற்குப் பொருள்களின் விலைகளை உயர்த்திவிடுகின்றார்கள்!

ஏன் திடீரென இந்த வரிகள்? 1944–45 வருட பட்ஜெட்டில் 78 கோடி ரூபாய் துண்டு விழுகிறது; அதைச் சரிக்கட்டவாம்!

புகையிலை வரியிலிருந்து 10 கோடி ரூபாயும், டீ, காபியிலிருந்து 2 கோடியும், பாக்கு வரியிலிருந்து 2 கோடியும் கிடைக்குமென எதிர்பார்க்கப்படுகிறது.

### சுற்றிலும் எதிர்ப்பு!

இந்த வரிகள் ஒரு விஷயத்தை நமக்கு திரும்பவும் ஞாபகப்படுத்துகின்றன. அதாவது யுத்தத்தை நடத்த பொதுஜன ஆதரவு பெறாததால் இந்த சர்க்கார் எதையும் செய்யத் துணியவேண்டிய நிலைமை ஏற்பட்டுள்ளது. தேசத்தின் இயந்திரப் பொருளாதார வளர்ச்சிக்கு முட்டுக்கட்டை போடும் சர்க்காரின் கொள்கையால், யுத்தத்தை நடத்த ஏழை மக்களையே மேலும் சுரண்டும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

எதனால் இந்த துர்பாக்யம் ஏற்பட்டுள்ளது! அதிகார வர்க்கம் அரசியல் நெருக்கடியை நீடிக்கும் கொள்கையையே அனுஷ்டிக்கிறது. அடக்கு முறை ஆட்சியையே கையாள்கிறது. அதன் விளைவாக ஜனங்களிடமிருந்து மேலும் மேலும் தனிமைப்படுத்தப்பட்டு நிற்கின்றது.

இயந்திரத் தொழில் அபிவிருத்தி செய்யாததால் இந்த அதிகார வர்க்கம் இயந்திரத் தொழில் முதலாளிகளின் ஒத்துழைப்பைக் கூட பெற முடியவில்லை. சர்க்காரின் கண்ட்ரோல் முறைகளில்அவர்கள் ஒத்துழைப்பதில்லை. யுத்தக் கடன் பத்திரங்களும் அவர்கள் வாங்கத் தயங்குகின்றனர்.

பொதுஜனங்களின் நம்பிக்கை பெற்ற அரசியல் தலைவர்கள் சிறையில்; அவர்களின் அரசியல் கட்சிகளுக்கு அவமதிப்பு—இந்நிலையில் பொதுஜனங்களும் சர்க்காரின் யுத்தக்கடன் பத்திரங்களை உற்சாகத்துடன் வாங்கமுடியாத நிலைமை. ஆதலால் சர்க்கார் மேலும் மேலும் வரிகளை உயர்த்திக்கொண்டு போகிறது. கீழ்த்தர அதிகாரிகள், பெரும்பாலும் விவசாயிகளை நிர்ப்பந்தப் படுத்தி வலுக்கட்டாயமாக யுத்தக் கடன் பத்திரங்களை வாங்கச் செய்கின்றனர்.

ஒரு தேசிய சர்க்கார் இன்று நம் நாட்டில் இருந்தால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்குமா? ஒருக்காலும் இருக்காது. அது தேசத்தில் பெரிய தொழிலபிவிருத்தி ஏற்படுத்தியிருக்கும். தேசிய வருமானத்தை அதிகரித்திருக்கும். பெரும் 'படா, படா' உத்யோகஸ்தர்களின் கொழுத்த சம்பளங்களைப் பெருவாரியாகக் குறைத்திருக்கும். ஏழைஜனங்களின் தேயிலைக்கு வரிபோடச் சென்றிருக்காது. அதனுடைய யுத்தக் கடன்களுக்கு தேசத்தின் எல்லாப் பகுதி மக்களும் தாராளமாய் முன்வந்து, மனப்பூர்வமாய் உதவியளித்திருப்பர்.

### எதிர் நோக்கும் அழிவு?

இந்தப் புதிய பட்ஜெட்டின் நிலைமை தேசத்தில் ஒரு பெரிய நெருக்கடியை சிருஷ்டித்துள்ளது. வரி கொடுக்க முடியாமல் ஏழைமக்களும், விவசாயிகளும் முதுகெலும்பு முறிந்துபோகும் நிலைமைக்கு வந்துவிட்டனர். தேசத்தின் பொருளாதார சீர்கேட்டை பயங்கரமான எல்லைக்குக்கொண்டுபோய் சேர்த்துவிடும் போலிருக்கிறது. அரசியல்நெருக்கடியைப் புறக்கணித்துவிட்டு தேசியப் பொருளாதாரத்தை சரிகட்ட இறுமாப்பு கொண்ட அதிகாரவர்க்கம் நினைக்கின்றது. எதிர்கால சுபிக்ஷத்தைப்பற்றி சர் ஜெரிமி ரெய்ஸ்மென் ரொம்ப நம்பிக்கையுடன் பேசினாலும் பெரிய அழிவுதான் எதிர்நோக்கி நிற்கிறது.

### ஆனால்....

ஆனால் இந்நிலைமையில் நம் ஜனங்களின் கடமை என்ன?

தேசத் தலைவர்களின் விடுதலைக்கும் தேசிய சர்க்காருக்கும், காங்கிரஸ்-லீக் ஒற்றுமைக்கும் இன்னும் ஆயிரம் மடங்கு உத்வேகத்துடன் வேலை செய்வதே.

அதிகாரவர்க்கத்தின் இந்த அநியாய பட்ஜெட்டை வன்மையாகக் கண்டிக்கின்றோம். ஆனால் அதேசமயத்தில் அம்மாதிரி ஏற்படாமல் தடுக்க நம் வழி-தேசத்தின் அரசியல் நெருக்கடியைப் போக்க செய்ய வேண்டிய வழி ஒன்றுதான்!

### தலைவர் விடுதலை அவசியம்

மார்ச்சு 4ந்தேதியன்று, புதுடில்லியில், இந்திய வர்த்தக சபையில் சர். குமாரராஜா முத்தையா செட்டியார் செய்த பிரசங்கமும் நிறைவேற்றிய தீர்மானமும்—இன்று எவ்வாறு இந்த அதிகார வர்க்கம் மக்களின் எல்லாப் பகுதியினரிடமிருந்தும் பிரிந்து, தனிமைப்பட்டு நிற்கின்றது என்பதைத் தெளிவாக்குகின்றது.

"அரசியல் கைதிகளை இன்னும் சிறையில் வைத்திருப்பதைக் கண்டு இச்சபை மிகவும் வருந்துகிறது. தேசீயத் தலைவர்களின் விடுதலையும், தேசீய சர்க்கார் அமைப்பதும் தான் இன்று தேசத்தில் சுமுகமான ஒரு நிலைமையை ஏற்படுத்தி யுத்தத்திற்குப் பின்னைய இந்தியா. அப்பொழுது எழும் பிரச்சனைகளை வெற்றிகரமாகத் தீர்க்கச் செய்யும்" என்ற முக்கியமான அரசியல் தீர்மானத்தை இவ்வர்த்தகசபை நிறைவேற்றியுள்ளது.

மேலும் தேசத்தில் பெரிய பஞ்சம் ஏற்பட்டுள்ளது. வங்கத்தில் ஏற்பட்டுள்ள கொடிய உணவுப் பஞ்சம் மற்ற பிரதேசங்களிலும் ஏற்படுமோ என ஐய மேற்படுகின்றது. ஆதலால் வெளியிலிருந்து போதிய உணவுப்பொருள் பெறுவது இப்பஞ்சத்தைத் தடுக்க சர்க்கார் தீவிரமாக வேலை செய்யவேண்டுமென்று மற்றொரு தீரமானம் கூறுகிறது.

### ஜன ஆதரவு தேவை

மேலும், பிர்லா, டாட்டா, தாகூர்தாஸ் முதலியவர்கள் தயாரித்த 15வருடப் பொருளாதாரத் திட்டத்தை வரவேற்று விட்டு, இம்மாதிரியான அந்த ஒரு திட்டத்தையும் வெற்றிகரமாக அமுல் நடத்த வேண்டுமென்றால், பொது ஜன ஆதரவும், பொருளாதார அரசியல் விஷயங்களில் பூர்ண சுயேச்சையும் பெற்ற ஒரு தேசிய சர்க்காரால் தான் முடியும் என்று மற்றொரு தீர்மானம் கூறுகின்றது.

இன்றையதினம் தேசத்திலுள்ள நிலக்கரிப் பஞ்சத்தையும், அதைப் போக்க சர்க்கார் கையாலாகாமல் இருப்பதையும் மற்றொரு தீர்மானம் குறிப்பிட்டது. நிலக்கரிசுரங்கங்களில் வேலை செய்யப் போதிய தொழிலாளிகள் கிடைக்கவில்லையென்றால் சுரங்கத் தொழிலாளர் விஷயத்தில் சர்க்காரின் அசிரத்தைதான் காரணம். நிலக்கரி சுரங்கத் தொழிலாளிகள் நிலைமை மகா மோசமாயுள்ளது. ஆதலால் அத் தொழிலாளிகளின் நிலைமைகளை சீர்படுத்தி உயர்த்துவதின் மூலமே அதிக தொழிலாளிகளை சுரங்கவேலைக்கு வரச்செய்யமுடியும் என்று அதே தீர்மானம் சர்க்காருக்கு வலியுறுத்தியிருக்கிறது.

இந்த அதிகாரவர்க்கத்தின் கொள்கைக்கு ஆசிகூற இந்நாட்டில் யாரும் தயாரில்லை என்பதே இத்தீர்மானங்களின் மூலம் விளங்குகின்றது.

காரல் மார்க்ஸ்

# அவதூறுக் கஞ்சாது புரட்சிக் கொள்கை பரப்பிய முதல் தொழிலாளர் தலைவர்

*(லண்டனிலுள்ள 'ஹை கேட்' மயானத்தில்* **மார்க்ஸ்** *பிரேதத்தின் முன்னிலையில்* **பிரெடரிக் எங்கல்ஸ்** *நிகழ்த்திய பிரசங்கம்.)*

"மார்ச்சுமாதம் 14ம் தேதி மாலை மணி 2-45 இருக்கும். உயிர் வாழும் சிந்தனையாளர்களுள் எல்லாம் தலைசிறந்த சிந்தனையாளர் சிந்தனை செய்வது நின்றது. இரண்டு நிமிஷங்கள் கூட ஆயிருக்காது, அவரை தனிமையில் விட்டுச் சென்ரோம். திரும்பி வந்தபொழுது நாற்காலியில் சாய்ந்தவண்ணம் சாந்தம் நிறைந்த நித்திரையில் இருந்தார்—விழிப்பு அறியாத நிரந்தர நித்திரை.

இம்மனிதனின் மறைவினால் அளவிடமுடியாத நஷ்டம். ஐரோப்பிய, அமெரிக்கத் தொழிலாளவர்க்கத்திற்கும் சரி, விஞ்ஞான சரித்திரத்திற்கும் சரி, சென்ற இம்மகத்தான ஆவியை ஈடுசெய்ய முடியாது. இந்த நஷ்டத்திற்கு கூடிய சீக்கிரத்தில் அனைவரும் வருந்துவர்.

வாழும் ஜந்துக்களின் பரிணம வளர்ச்சியை டார்வின் கண்டுபிடித்தார். அதைப்போலவே மார்க்ஸ் மனித சரித்திரத்தில் பரிணம வளர்ச்சியின் நியதியைக் கண்டுபிடித்தார்.

## கண்டுபிடித்த உண்மை

மிதமிஞ்சிப் பெருகிக் கிடந்த கொள்கைகளில் பொதிந்து மறைந்து கிடந்த ஒரு எளிய உண்மையை கண்டுபிடித்தார். அதாவது மனித வர்க்கம், அரசியல், விஞ்ஞானம், கலை, மதம் என்ற அறிவு சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஈடுபடுவதற்கு முன் உண்ண உணவும், உடுக்க உடையும், இருக்க இடமும் வேண்டும். அந்தக் காரணத்தினால் வாழ்க்கைப் பொருள்களை உற்பத்தி செய்வது, அதாவது வேறு வார்த்தைகளில் சொன்னால் குறிப்பிட்ட மக்களின் பொருளாதார வளர்ச்சிதான் சமூகத்தின் அஸ்திவாரம். அந்த அஸ்திவாரத்தின் மீது கட்டப்படுவதே அரசாங்க அமைப்பு, சட்டதிட்டங்கள், கலை, மதாசாரங்கள் முதலியன. பொருளாதார வளர்ச்சியைக் கொண்டுதான் அறிவு, நாகரீக வளர்ச்சியை விளக்கவேண்டும். இதுவரை பழக்கத்திலிருந்து வருவது போல் தலைகீழ் பாடமல்ல. அறிவு, கலை, நாகரீக வளர்ச்சியைக் கொண்டு பொருளாதார வளர்ச்சியை விளக்குவதல்ல.

## "உபரி மதிப்பு"

ஆனால் அதுமட்டுமல்ல. எந்த விசேஷ நியதியில் தற்கால முதலாளித்வ உற்பத்தி முறை இயங்குகின்றது என்பதைக் கண்டுபிடித்தார். அதேபோல் இந்த உற்பத்தி முறை சிருஷ்டித்த பூர்ஷ்வா அல்லது முதலாளித்வ சமூகத்தின் நியதியையும் கண்டுபிடித்தார். முதலாளித்வ பொருளாதார நிபுணர்களும், சோஷியலிஸ்டு விமர்சகர்களும் இதற்கு முன் முதலாளித்வ பொருளாதாரத்தில் எழும் பல சிக்கலான பிரச்னைகளைத் தீர்க்க ஆராய்ச்சி செய்தனர்; வழிகாணுது தவியாய்த் தவித்தனர். அந்த பிரச்னைகளையெல்லாம் தெட்ட தெளிவாக்கிற்று மார்க்ஸ் கண்டுபிடித்த உபரி மதிப்பு. (முதலாளித்வ பொருளாதாரத்தில் உற்பத்தியாகும் ஒவ்வொரு பொருளிலும் இருவித உழைப்பு அடங்கி யிருக்கிறது; கூலி கொடுத்த உழைப்பு. கூலி கொடுக்காத உழைப்பு. கூலி கொடுக்கப்படாத உழைப்பினால் ஏற்படுவதே உபரி (அதிக) மதிப்பு).

ஒருவர் வாழ்நாளில் இத்தகைய இரண்டு பெரிய உண்மைகளைக் கண்டுபிடிப்பதே பெரிய காரியம். இதுபோன்ற ஒரு உண்மையைக் கூட கண்டுபிடிக்கும் மனிதன் பெரும் பாக்யசாலி. ஆனால் மார்க்ஸ் ஆராய்ச்சி செய்த ஒவ்வொரு துறையிலும்—அவர் பலதுறைகளில் ஆராய்ச்சி செய்தார்—ஒன்றும் மேலோட்டாகச் செய்யவில்லை-கணிதத்திலும் கூட சுயமாக பல உண்மைகளைக் கண்டுபிடித்தார்.

## விஞ்ஞானத்தில் அக்கரை

இத்தகையவர் இந்த விஞ்ஞானவாதி. இது அவருடைய திறமையையும் பெருமையையும் ஒன்றுக்குப் பாதிதான் எடுத்துக் காட்டுகிறது. மார்க்ஸிற்கு விஞ்ஞானம், சரித்திர பூர்வமாக மாறுதலை உண்டாக்கி வரும் புரட்சி சக்தி. சிலதுறைகளில் தத்வரீதியில் விஞ்ஞான உண்மைகளைக் கண்டுபிடித்த காலத்தில் அதை ஆனந்தத்துடன் வரவேற்ருர். ஆனால் அவ்வுண்மைகளை நடைமுறையில் கொண்டுவந்தால் எப்படியிருக்கும் என்று கற்பனை செய்வதே அன்று இயலாத காரியமாக இருந்திருக்கும். ஆனால் தொழில் முறையிலும், சரித்திரப் போக்கிலும், புரட்சிகரமான மாறுதல்களை உண்டாக்கும்—உடனடி நடைமுறையில் வருவதின் விளைவாய் ஏற்படும் மாற்றங்கள்—உண்மைகளைக் கண்டுபிடித்தபோது அவருக்கு ஏற்படும் சந்தேகமே அலாதி. உதாரணமாக மின்சாரத்தில் ஒன்றின்பின் ஒன்ருக நிபுணர்கள் கண்டுபிடித்துக்கொண்டு வரும் பல அரிய விஷயங்களை வெகு கவனமாக அறிந்து வந்தார். சமீபகாலத்தில் மார்ஷல் பெட்ரேயின் ஆராய்ச்சியில் அசாத்ய அக்கரை காட்டி வந்தார்.

## புரட்சிக்காரர்

ஏனெனில் மார்க்ஸ் எல்லாவற்றிற்கும் மேல் ஒரு புரட்சிக்காரர். அவருடைய வாழ்க்கை லட்சியம், முதலாளித்வ சமூகத்தையும், அது பிறப்பித்துள்ள அரசாங்க அமைப்புகளையும் கவிழ்ப்பதற்கு ஏதாவது ஒரு வழியில் கைங்கர்யம் செய்யவேண்டுமென்பது. இன்றையப் பாட்டாளி மக்களின் விடுதலைக்கு தன்னாலானதைச் செய்வது; பாட்டாளிகளின் நிலைமை, அதன் தேவைகள், எந்த நிலைமையில் அவர்கள் விடுதலையைப் பெறமுடியும் என்பதை அவர்களுக்கு உணர்த்தியவர் கார்ல் மார்க்ஸ்தான். போராட்டம் அவர் இரத்தத்தில் ஊறிப்போயிருந்தது. போராட்டத்தில் என்ன உணர்ச்சி, அதில் சலிப்பா, சோர்வா, களைப்பா ஏதாவது தெரியுமா! என்ன வெற்றி! போராட்டத்தில் அவருக்கு நிகர் எவருமில்லை. (1842-ல்) ரெயினிசே ஸீடங், (1844-ல்) பாரிஸில் வார்வாட்ஸ், (1847-ல்) பிரஸல்ஸில்; ட்யூட்சே ஸீடங் (1848-49 ல்) நியூ ரெயினிஷ் ஸீடங்க் (1852-61 ல்) நியூயார்க் ட்ரிப்யூன் முதலிய பத்திரிகைகளில் வேலை செய்தார். அன்றியும் புரட்சிப் பிரசுரங்கள் பல வெளியிட்டார். லண்டனிலும், பாரிஸ் நகரிலும், பிரான்ஸிலும் புரட்சிக் கழகங்களில் பணிசெய்தார். இவற்றிற்கெல்லாம் மேலான அவரது பணி சர்வதேச உழைப்பாளிகளின் சங்க ஸ்தாபனம். இந்த ஒரு சேவையே வேறெதுவுமே செய்யாவிடிலும் கூட—அதன் ஸ்தாபன கர்த்தா பெருமைகொள்ளத் தகுதிகொண்ட அரிய சாதனை.

## அவதூற்றுக் கஞ்சவில்லை!

இக் காரணங்களால் அவர் காலத்தில் அவரைப்போல் வெறுக்கப்பட்டவர்கள் கிடையாது. இல்லாத அவதூறுகளுக்கு ஆளானர். அரசாங்கங்கள்—யதேச்சாதிகாரிகளும் சரி, குடியாட்சிகளும் சரி—அவரை நாடுகடத்தினர். பூர்ஷ்வாக்கள்—அவர்கள் வைதீகக் கொள்கை கொண்டவராயினும் சரி, தீவிர ஜனநாயகவாதிகளாயினும் சரி—அவரைப்பற்றி இல்லாத பொல்லாத அவதூறுகளைச் சொல்வதில் ஒருவரையொருவர் மிஞ்சினர். இதை எல்லாம் அவர் சிறிதும் பொருட்படுத்தவில்லை. அவை காற்றில் போகட்டும் என்று அதைப்பற்றி எள்ளளவும் கவலை செலுத்தவில்லை. அவசியமேற்பட்டால் மட்டுமே—நிர்பந்தமிருக்கும் போதுதான்—அவற்றிற்கு பதில் கொடுத்தார். அவர் இன்று உயிர் நீத்தார். உடன் உழைத்த லட்சக்கணக்கான புரட்சித் தோழர்களின் அன்புக்குப் பாத்திரமானவர். அவர்களால் மதிக்கப்பட்டவர். அவர்களை இன்று துக்கத்தில் ஆழ்த்தி யிருக்கிருர். ஸைபீரியச் சுரங்கங்களிலிருந்து, ஐக்ய அமெரிக்காவிலுள்ள காலிபோர்னியா வரையிலுள்ள எல்லாப் புரட்சிக்காரர்களும், ஐரோப்பிய, அமெரிக்கப் புரட்சிக்காரர்களும் இன்று துயரத்தில் ஆழ்ந்திருக்கின்றனர். அவருக்கு விரோதிகள் யதேஷ்டம். ஆனால் தனிப்பட்ட முறையில் அவருக்கு விரோதியும் கிடையாது என்று சொல்லத் துணிவேன்.

அவரும், அவரது நாட்களும், சேவையும், என்றென்றும் திகழும்.

காரல் மார்க்ஸ் பிறந்தது 1818 மே 5, ப்ரஷ்யா (பழைய ஜெர்மனி) வில் ரைன் மாகாணத்தில். இறந்தது 1883 மார்ச் 14."

## உலகம் ஏற்ற கொள்கை

சர்வதேசத் தொழிலாளி வர்க்க இயக்கத்தின் ஸ்தாபகராகிய இவரைப்போல் வேறுயாரும் உலக சரித்திரத்திலேயே அவ்வளவாக வசைமொழிகளைப் பெற்றதில்லை. ஒரு காலத்தில் இவருடைய கொள்கைகள் கவைக்குதவாதவை என்று ஒதுக்கித் தள்ளப்பட்டன. இன்று உலகத் தொழிலாளிவர்க்கம்-உலக மக்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளும்படியாயிருக்கின்றன.

இவர் இறந்து 61 வருஷங்களாகின்றன. இந்தக் காலத்தில் மார்க்ஸுடைய கொள்கைகளையும், சித்தாந்தங்களையும் மாற்றி யமைக்கவும், திருத்தவும், அழிக்கவும் பலரால் பல முயற்சிகள் செய்யப்பட்டுள்ளன. அப்படி செய்ய முயன்ற ஒவ்வொருவரும் பூர்ஷ்வா உலகத்தில் ஒரு பெரிய புதிய அறிவாளியென வரவேற்கப்பட்டனர். உலக சரித்திரத்திலே பேரும் புகழும் பெற்றனர்.

ஆயினும் இன்று அவர்களுடைய பெயர்களும், அவர்களின் நூல்களும் சரித்திரத்தின் குப்பைத்தொட்டியில்தான் இடம் பெற்றிருக்கின்றன. அதேசமயத்தில் மார்க்ஸின் பெயரும், அவரது நூல்களும் இன்றும் அழிக்க முடியாதவாறு சுடர் விட்டுப் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன.

உலகத்திற்கு வழிகாட்டியாயிருந்துவரும் மகத்தான சோவியத் யூனியன், ஐரோப்பாவில் அடிமைத்தனத்தை எதிர்த்து விடுதலை இயக்கங்களை நடத்திவரும் கம்யூனிஸ்டுகளின் தன்னலமற்ற தியாகம், வீராவேசம், மகத்தான சீனக் கம்யூனிஸ்டுக் கட்சியின் இணையிலா தீரம், கம்யூனிஸ்டு இயக்கத்திற்கே உலகெங்கும் வளர்ந்துவரும் ஆதரவு—இவையெல்லாம் இந்த இயக்கத்தை ஸ்தாபித்த மனிதனின்—மார்க்ஸின் நிகரில்லாத் தன்மைக்கு பிரத்யட்ச சாட்சியங்கள்.

பலவருஷங்களுக்கு முன்பே விஞ்ஞான அறிவின்மூலம் கிடைத்த திடமான நம்பிக்கையுடன் மார்க்ஸ் சொல்லி வைத்தார் :-என்ன ? இந்த (கம்யூனிஸ்டு) இயக்கம் உலகம் பூராவும் பரவி, எல்லா மக்களுக்கும் சுக வாழ்க்கையும், சந்தோஷமும் அளிக்கும்வரைவளர்ந்து செல்லும், என்று கஷ்டங்களும், துன்பங்களும் நிறைந்ததன் வாழ்க்கை பூராவிலும் இந்த இயக்கத்தை பலப்படுத்துவதற்காக, புரட்சி ஆர்வத்துடன் வேலை செய்தார்.

ஆதலால், இன்று அத்தலைவனுக்கு நம் வணக்கத்தைத் தெரிவிக்கும்போது, அவருடைய சாதனையை முன்எடுத்துச் செல்வோமென்று—உலகத்திலுள்ள எல்லாதேச மக்களுடனும் சேர்ந்து நம் நாட்டின் விடுதலைக்காகவும், மனித சமுதாயத்தின் விடுதலைக்காகவும் உழைப்போம் என்று—சபதம் எடுப்போமாக!

## வங்கத்திற்கு சென்னை மாணவர் ஐக்ய வைத்யகோஷ்டி

*சென்னை மாணவர் சங்கமும்* (M. S. O.), *சென்னை மாணவர் கிருஸ்தவ சங்கமும் ஒரு கூட்டு வேண்டுகோள் விடுத்துள்ளன. அதில்*

"………சென்னை மாணவர் சங்கமும், சென்னை மாணவர் கிருஸ்தவ சங்கமும் கூட்டுமுறையில் வங்கத்திற்கு ஒரு வைத்ய கோஷ்டியை அனுப்பத் தீர்மானித்துள்ளன. அக்கோஷ்டியில் சென்னை வைத்தியக் கல்லூரிகளில் வாசிக்கும் 15 மாணவர்கள் சேர்ந்திருக்கின்றனர்.

இந்தக் கோடை விடுமுறையில் அக்கோஷ்டி வங்கம் சென்று 6 வாரங்கள் நிவாரண வேலை செய்யும்.

இவ்வேலையில் சென்னை முஸ்லிம் மாணவர் சம்மேளனத்தையும் சேர்ந்து ஒத்துழைக்கும்படி நாங்கள் கேட்டுக்கொள்கிருேம்.

கடைசியாக, சென்னையிலுள்ள எல்லா மாணவர்களும், பொதுஜனங்களும் தங்களாலான எல்லா உதவியையும்—பணம், துணிமணிகள், மருந்து சாமான்கள்—அளித்து மடிந்துகொண்டிருக்கும் வங்கத்தைக் காப்பாற்ற முன்வரும்படிக் கேட்டுக்கொள்கிருேம்."

காரியதரிசிகள்,

**மாணவர் கிருஸ்தவ இயக்கம்**
(சென்னை, வேலூர் பிரதேசம்)

**சென்னை மாணவர் சங்கம் (M.S.O.)**
12, சரபாலி ஹவுஸ், பிராட்வே, சென்னை,

தமிழ் நாட்டில்

# செஞ்சேனை தினம்

## சோவியத் மக்களுக்கு வாழ்த்து

பிப்ரவரி 23-ந் தேதி பொன்மலையில் செஞ்சேனை தினம் கொண்டாடப்பட்டது, "ரயில்வே ஒர்க் ஷாப் ஆர்மரி கேட்டிலிருந்து சிவப்பு உடையணிந்த செந்தொண்டர்கள் ஊர்வலம் புறப்பட்டது. நூற்றுக்கணக்கான தொழிலாளர்கள் சங்கத் திடலில் கூடினர்கள். தோழர் பணிக்கர் பேசினர்.

கீழ்கண்ட செய்தி ஏகமனதாக நிறைவேற்றப்பட்டு, லண்டனில் சோவியத் ஸ்தானிகராகவிருக்கும், தோழர் சாப்லருக்கு அனுப்பப்பட்டது:—

### செய்தி

பொன்மலை, 23-2-44.

தோழர் சாப்லர்
சோவியத் ஸ்தானிகர்
லண்டன்.

அன்புமிக்க தோழரே,

செஞ்சேனை தினத்தன்று, பொன்மலையில் நடந்த பொதுக்கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட கிழ்க்கண்ட தீர்மானத்தை, தங்களுக்கு அனுப்புகிறேன். இந்த தீர்மானத்தை சோவியத் மக்களுக்கும், செஞ்சேனைக்கும், உங்கள் சர்க்கார் மூலம் அனுப்பினால், மிகவும் மகிழ்ச்சியடைவோம்.

தீர்மானம் :— செஞ்சேனை பிறந்த 26-ம் வருட விழாவில், தென் இந்திய ரயில்வே தொழிலாளர்களாகிய நாங்கள், கீர்த்தி பெற்று உயர்வடைந்த செஞ்சேனைக்கு எங்கள் வாழ்த்தைத் தெரிவிக்கிருேம். தனியாக நின்று, பாஸிஸ்ட் பைசாச சக்திகளை எதிர்த்துப் போராடி வருகிறது; அவர்களுக்கு தோல்விக்கு மேல் தோல்வியை உண்டாக்கிவருகிறது; அதன்மூலம் ஏகாதிபத்தியப் பிற்போக்கு வாதிகளின் கையிலிருந்து, பொதுஜனங்களுடைய கையில் ஐரோப்பா மாறுவதற்கான நிலைமையை சிருஷ்டித்து வருகிறது.

சோவியத் மக்களுடைய, செஞ்சேனையுடைய, உன்னதத் தலைவர் ஜே. வி. ஸ்டாலினுடைய தலைமையில் உலகம் பூராவும் நடக்கும், சுதந்திர ஆர்வங்கொண்ட மக்களுடைய விடுதலைப் போரில், நாங்கள் எங்களுடைய பங்கை செய்து முடிப்போம் என்ற பிரதிக்கினையை திரும்பவும் ஊர்ஜிதப்படுத்துகிறேம்."

லால்சலாம்
K. அனந்தநம்பியார்
பொதுக்காரியதரிசி.
தென் இந்திய ரயில்வே
தொழிற்சங்கம்.

### குண்டக்கல்

பிப்ரவரி 23-ந் தேதி குண்டக்கல்லில் எம். எஸ். எம். ரயில்வேதொழிலாளர் செஞ்சேனை தினத்தைக் கொண்டாடினர்கள். தோழர் கன்னிராவ் தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் நடந்தது. "இந்தியாவில் இருக்கும் மற்ற தொழிலாளர் விவசாயிகள், பொதுமக்களை ஒன்றுசேர்த்து, தேசிய சர்க்கார் அடைவதற்கும், பாஸிஸ எதிர்ப்பு யுத்தத்தில் நம் கடமையை செய்து நம் விடுதலையை அடையவும் முயற்சி செய்வதின் மூலம் செஞ்சேனையின் வீரப் போரை பலப்படுத்துவதாக" தொழிலாளர்கள் பிரதிக்கினை எடுத்துக் கொண்டனர்.

### சென்னை

ஓட்டேரி மைதானத்தில் தோழர் பி. சீனிவாச ராவ் தலைமையில் 23-2-43ல் நடந்த ஒரு பொதுக்கூட்டத்தில் செஞ்சேனையை வாழ்த்தி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

★

## தொழிற்சங்க ஊழியர்களுக்கு சிறைதண்டனை!

### அதிகாரவர்க்க அடக்குமுறை

இராஜபாளயம் மில் தொழிலாளர் சங்கக் காரியதரிசி தோழர் அலக்ராஜ், பொக்கிஷதார் பங்காரு ராஜு என்ற தோழர்கள் மீது தொடரப்பட்டிருந்த வழக்கில் சிவகாசி அடிஷனல் முதல் வகுப்பு மாஜிஸ்ரேட், அந்த இரு வருக்கும் தலா 18 மாதம் கடுங்காவல் விதித்துள்ளர்.

மேற்படி இரு தோழர்களும் உற்பத்திப் பெருக்கென்ற தேசபக்திக் கொள்கையை சிரமேற்கொண்டு இராஜபாளையத்தில் தொழிலாளர் அணியில் வேலைசெய்து வந்தனர்.

இராஜபாளையம் மில்லில் 18 டாபிக் பையன்களை 27-7-43ல் வேலை நிறுத்தத்திற்குத் தூண்டியதாக, அவ்விரு தோழர்களும் 1-11-43ல் கைது செய்யப்பட்டனர்.

சென்ற 4 மாதங்களாக வழக்கு விசாரணையிலிருந்து வந்தது.

சிவகாசியைவிட்டு வழக்கு முடியும் வரை வெளியே செல்லக்கூடாதென்று செஷன்ஸ் ஜட்ஜ், நிபந்தனையின்பேரில் அந்த இருதோழர்களையும் ஜாமினில் விடுதலை செய்திருந்தார்.

தண்டிக்கப்பட்ட தோழர்கள் திருச்சி சிறைக்குக்கொண்டு போகப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

★

## அமெரி ஒழிக

சமீபத்தில் நடந்த பிரிட்டிஷ் மின்சாரத் தொழிலாளர் சங்கத்தின் நிர்வாகக் கவுன்சில் கூட்டத்தில், இந்தியா மந்திரி அமெரியைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. "அமெரியின் பதவி ஒழிய வேண்டும்" என்று தீர்மானம் கூறுகிறது. "பஞ்சத்தினால் இந்திய மக்கள் படும் கொடிய கஷ்டங்களுக்கெல்லாம் அமெரிதான் பொறுப்பு" என்றும் கூறுகிறது.

6-ம் பக்கத் தொடர்ச்சி

கலால் அதிகாரிகளால் வீண் தாமதம் ஏற்பட்டு, அதனால் தொழிலாளிகள் கூலியும், சுருட்டு உற்பத்தியும், குறைவதால், இது விஷயமாக பிரதம கலால் அதிகாரியைக் கண்டுபேச ஒரு கமிட்டி ஏற்படுத்தப்படுகிறது.

தவிர, அமெரிக்காவில் நடைபெறப் போகும் சர்வதேசத் தொழிலாளர் மகாநாட்டுக்கு இந்தியத் தொழிலாளிகளின் சார்பாக, அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் (A. I. T. U. C.) தான் பிரதிநிதியை அனுப்ப உரிமையுண்டென்றும், மற்றவை (M. N. ராய் முதலியவர்களின் ஸ்தாபனங்கள்) போலி ஸ்தாபனங்களென்றும் கூறும் மற்ரெரு தீர்மானம்.

பொது ஜனங்களின் நன்மைக்குகந்த முறையில் அரிசிப் பங்கிடுத் திட்டம் வெற்றிகரமாய் நடைபெற ஸ்தல அதிகாரிகள் பொதுஜன உணவுக் கமிட்டிகளுடன் ஒத்துழைக்க வேண்டுமென்று இன்னெரு தீர்மானம்.

குலசேகர பட்டணம் நாச வேலை சம்பந்தமாக, காசிராஜன், ராஜகோபாலன் மீது விதித்திருக்கும் தூக்கு தண்டனை நியாயமற்றது; அதை உடனே ரத்து செய்யவேண்டுமென்பது மற்ரெரு தீர்மானம்.

சுருட்டுத் தொழிலாளிகளின் பஞ்சப்படி விஷயமாக, பல முதலாளிகள் இன்னும் இணங்காமலே இருப்பதினல், அதிகாரிகள் தலையிட்டு சமரசம் ஏற்படுத்த வேண்டுமென்பது கடைசி தீர்மானம்.

தேசீய அரங்கத்தில் முஸ்லிம் லீக்

# தேசத்திற்கு பேராபத்து!

## ஒன்று சேர அரிய சந்தர்ப்பம்

இந்த யுத்தம் ஆரம்பிக்கப்பட்ட பின்பு, இந்திய விடுதலைக்குக் கிடைத்த சந்தர்ப்பம் இவ்வளவு அவ்வளவு என்று கணக்கிட முடியாது. பெரிய சந்தர்ப்பம்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் நெருக்கடியில் சிக்கியது. எந்தெந்த இடங்களில் ஜனங்கள் ஒன்று சேருகிறார்களோ அங்கெல்லாம், அது ஜனங்களிடம் அடிபணிகிறது. எங்கெல்லாம் வேற்றுமை நிலவுகிறதோ, அங்கெல்லாம் அது எதேச்சாதிகாரம் நடத்துகிறது.

தேசத்திற்கு பேராபத்து ஏற்பட்டது. நாஜிப் படையெடுப்பாளர்கள் சோவியத் நாட்டைத்தாக்கி இந்தியாவை நோக்கி முன்னேறிவந்தனர்; வட ஆப்ரிக்காவில் எகிப்து வரை வந்துவிட்டனர். பாஸிஸ்ட் ஜப்பான் மலேயா, பர்மா முதலிய நாடுகளை விழுங்கி இந்தியாவை நோக்கி வந்துவிட்டான். மத்திய இந்தியாவில் ஒருஇடத்தில் ஜெர்மன் இராணுவமும், ஜப்பானிய இராணுவமும் சந்திப்பது என்பது அவர்களுடைய திட்டம்.

இந்த நிலையில் இந்தியாவின் பாதுகாப்புஅத்தியாவசியமாகிறது. பாஸிஸ்ட்கள் கையில் இந்தியா சிக்கினால் இந்திய ஜனங்களுக்கு எத்தகைய துன்பம் நேரிடும்; சுதந்திரம் என்பதை கனவில் கண்டதாகக் கூறினாலே, அவ்விதம் கூறியவன் சுட்டுக் கொல்லப்படுவான். ஹிந்துக்கள், முஸ்லிம்கள் என்ற வித்தியாசம் ஏது! ஜப்பானியப் படைகள் முஸ்லிம் தேசிய இனங்கள் வசிக்கும் கிழக்கு வங்காளத்திலும், ஜெர்மன் படைகள் சிந்து பலுஜிஸ்தான் போன்ற மேற்கு இந்தியாவிலேயும் தான் முதலில் நுழைவர். "பாக்கிஸ்தான்" என்று லீக் கோருகின்ற பிரதேசங்களுக்குத்தான் அதிக ஆபத்து உடனடியாக வரக்கூடியதாக இருந்தது.

அதே சமயத்தில் உலக ஜனங்களுடைய ஆதரவு இந்தியாவின் பக்கம் நின்றது, ஜப்பானை எதிர்க்க, ஜெர்மனியை முறியடிக்க, நாற்பதுகோடி இந்தியர்களிடம் அதிகாரத்தைக் கொடு என்று உலக மக்கள் அபிப்பிராயம் இந்தியாவின் பக்கம் திரண்டது. பிரிட்டிஷ் தொழிலாளர் வர்க்கம் பெருங்கிளர்ச்சியை செய்தது. அமெரிக்காவில், சீனாவில், ஆஸ்திரேலியாவில், நியூஜீலந்தில் ஜனங்களுடைய கிளர்ச்சி நடந்தது.

### பொதுவான கடமை

நாட்டிற்கு பெரிய ஆபத்து; தேசப் பாதுகாப்பு காங்கிரஸ்—லீக்கின் பொது லக்ஷியம்; கடமை. அவை இரண்டும் ஒன்றாக நின்று தேசத்தைப் பாதுகாக்கவேண்டும்; ஒன்று சேருவதற்கு பெரிய சந்தர்ப்பம்.

அவர்கள் ஒன்றாக சேர்ந்திருந்தால் நெருக்கடியில் சிக்கிய அதிகாரவர்க்கத்தை ஒரு நொடியில் பணியவைத்திருக்கலாம், 40 கோடி இந்தியரின் ஒன்றுபட்ட சக்தியால் எதைத்தான் சாதிக்க முடியாது?

அதோடு உலக மக்களின் ஆதரவு இந்தியாவின் பக்கம்; அதிகாரத்தை விட்டுக்கொடுக்க மறுக்கும் ஏகாதிபத்தியத்தைப் பணியவைக்க அவர்களுடைய சக்தி இன்னும் அதிக சந்தர்ப்பத்தை அளித்தது. உலக மக்களின் நிர்ப்பந்தத்தின் முன் ஏகாதிபத்தியத்தால் நிற்கமுடியவில்லை.

உலகமக்களை ஏமாற்ற ஒரு நாடகம் நடத்த அவர்கள் திட்டமிட்டனர். காங்கிரஸ்—லீக் ஒன்றாகாமல் இருப்பதை உபயோகப்படுத்திக்கொள்ள சதி செய்தனர்.

### நாடகம்

அந்த நாடகம்தான் கிரிப்ஸ்தூது. சோஷியலிசப் போர்வையைப்போர்த்திஇந்தியாவின் சார்பாக அதுவரை நிரம்ப அளந்து கொட்டிக்கொண்டிருந்த ஸர். ஸ்டாபோர்ட் கிரிப்ஸை நாடகத்தின் கதாநாயகனாகத் தேர்ந்தெடுத்தனர். "உலக மகாஜனங்களே! இதோ போகிறார் கிரிப்ஸ்! இந்தியாவின் நண்பன்; சுதந்திரம் கொண்டு போகிறார்!" என்று உலகமெங்கும் விளம்பரங்கள் பறந்தன.

இந்த இடத்தில், கிரிப்ஸ் திட்டத்தை காங்கிரஸும்—லீக்கும் ஒப்புக்கொள்ளமறுத்தது சரிதானா என்பதைப்பற்றி விவாதிப்பது சரியல்ல. ஏனெனில் அதிகாரத்தை விட்டுக் கொடுப்பது ஏகாதிபத்தியத்தின் நோக்கமல்ல. காங்கிரஸ்—லீக் வேற்றுமையை உபயோகப்படுத்திக்கொண்டு, உலக மக்களை ஏய்ப்பதே ஏகாதிபத்திய வாதிகளின் நோக்கம்; பாதுகாப்புக்கான ஆயுதத்தை—தேசிய சர்க்காரை—இந்தியர்களின் கையில் ஒப்படைத்து, இந்தியர்களின் கையை ஓங்கச் செய்வது அவர்களுடைய நோக்கமல்ல. அதற்கு எதிராக, அதிகாரத்தை இந்தியர்களின் கையில் ஒப்படை என்று நிர்ப்பந்திக்கும் ஜனங்களை ஏமாற்றி, அதிகாரத்தைத் தன் கையிலேயே வைத்துக்கொண்டு, தன்னுடைய இஷ்டப்படியே, தன்னுடைய ஏகாதிபத்திய முறைப்படியே ஜப்பானை முறியடித்து, தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநிறுத்துவதே ஏகாதிபத்தியத்தின் நோக்கம்.

ஏகாதிபத்தியத்தின் இந்த சூழ்ச்சியை முறியடித்து, பாசிஸ்ட் ஆக்கிரமிப்பாளர்களிடமிருந்து இந்திய மக்களைக் காப்பாற்றவும், இந்திய சுதந்திர சக்தியை பலப்படுத்தவும் இந்திய தேசிய ஸ்தாபனங்கள் என்ன செய்திருக்க வேண்டும்! ஏகாதிபத்தியம் எந்த ஆயுதத்தைக் கொண்டு இந்தியரைத் தாக்குகின்றதோ, அந்த ஆயுதத்தை அவர்களிடமிருந்து பறித்துவிட வேண்டும். ஏகாதிபத்தியம் உபயோகப்படுத்தும் ஆயுதம் காங்கிரஸ்–லீக் பிளவு. அதை ஒழித்து காங்கிரஸும் லீக்கும் ஒன்றுபட்டிருந்தால், ஏகாதிபத்தியத்திற்கு வேறு வழியில்லை.

### சூழ்ச்சி ஜெயித்தது!

தேசத்திற்கு மிகப் பெரிய ஆபத்து ஒருபுறம்; மறுபக்கத்தில் தேசீய ஸ்தாபனங்கள் ஒன்று சேருவதற்கு பெரிய சந்தர்ப்பம்; ஏகாதிபத்தியத்தைப் பணியவைக்க அரிய சந்தர்ப்பம்.

நமது தேசபக்தியில் துக்ககரமான அத்தியாயம். அந்த சமயத்திலும் காங்கிரஸும்–லீகும் ஒன்றுசேரவில்லை. கிரிப்ஸ் தூது ஏகாதிபத்திய வாதிகளுக்கு வெற்றி அளித்தது; ஏகாதிபத்திய வாதிகளின் சூழ்ச்சி ஜெயித்தது.

"ஏ உலகமக்களே! இதோ பாருங்கள்! இந்தியாவின் நண்பர்; பெரிய சோஷியலிஸ்டு ஸர் ஸ்டாபோர்டு கிரிப்ஸை அனுப்பினோம். சுதந்திரம் கொடுப்பதாக உறுதி கூறினோம். இந்தியர்கள், தங்களுக்குள்ளே ஒற்றுமை இல்லாமல், அதை நிராகரித்துவிட்டனர். இனி நாங்கள் என்ன செய்வது? நாங்களேதான் ஜப்பானை எதிர்த்துப் போராட வேண்டும்" என்று ஏகாதிபத்தியத்தின் ரேடியோ நிலையங்களும், பத்திரிகைகளும், பிரசாரகர்களும், உலகமெங்கும் கதற ஆரம்பித்துவிட்டார்கள்.

இந்தியர்களுக்குக் கொஞ்சங்கூட அதிகாரத்தை விட்டுக்கொடுக்க முடியாது என்று ஏகாதிபத்தியவாதிகள் பேச முற்பட்டனர்.

### சீர்குலைவு

அதிலிருந்து நிலைமை இன்னும் கேவலமாகவே வளர்ந்து வந்திருக்கிறது. காங்கிரஸ் தலைவர்கள் சிறையிலடைக்கப்பட்டனர்; தேசபக்தர்கள் ஆத்திரமூட்டப்பட்டனர்; "பாசிஸ்ட் நண்பர்கள்" எனக் கூறி அவர்களை எதுவும் செய்யலாம்என்று அதிகார வர்க்கம் எண்ணிவிட்டது.

காங்கிரஸின் ஆகஸ்டு தீர்மானத்தை, முஸ்லிம் லீக் வேறுவிதத்தில் பார்த்தது. "ஏகாதிபத்தியத்தை நிர்ப்பந்தித்து, அதிகாரத்தைக் கைப்பற்றி, முஸ்லிம் மக்களை அடிமைகளாக வைக்கவே காங்கிரஸ் அந்தத் தீர்மானத்தை நிறைவேற்றிற்று" என்று முஸ்லிம் லீக் தலைவர்கள் கூறுகிறார்கள்.

ஏன் அதிகமாக வளர்த்துவானேன்! சுருங்கக் கூறினால் ஒற்றுமை ஏற்படவில்லை.

தேச பக்தி! எவ்வளவு அர்த்தமுள்ள பதம்! "இந்த நாடு என்னுடையது" என்று அதுதான் பெருமையுடன் கூவுகிறது! இந்த நாட்டு மக்களெல்லோரும் ஒரே குலம் என்று அதுதான் பேசுகிறது! சுயராஜ்ஜியம் வேண்டுமென்று அது தான் கேட்கிறது! பாக்கிஸ்தான் வேண்டுமென்றும் அதுதான் கேட்கிறது!

ஆனால், அந்த தேசபக்தி—காங்கிரஸ்—லீக்கின் தேசபக்தி—பொது லக்ஷியத்திற்காக, தேசப் பாதுகாப்பிற்காக ஒன்று சேரவில்லை! என்ன துக்ககரமான நிலைமை!

### வேற்றுமையால்

அதிகார வர்க்கத்தின் எதேச்சாதிகாரம்; கையாலாகாத அதிகார வர்க்கம்; தேசத்தில் எந்த ஜன பகுதியின் ஆதரவுமற்ற அதிகார வர்க்கம்! ஜனங்களுக்கு எண்ணற்ற தீங்குகளை இழைத்து வருகின்றது. உண்ண உணவில்லை! கட்டத் துணியில்லை. புயலால், வெள்ளத்தால், பஞ்சத்தால், பட்டினியால், தொத்து நோயால், பாஸிஸ்ட்குண்டால் எத்தனை ஆயிரம் ஜனங்கள்—இந்தியர்கள்—நம் சகோதரர்கள்—ஹிந்து முஸ்லிம்கள்—மடிந்து மண்ணோடு மண்ணாகிறார்கள்! கோரக் கஷ்டத்தைக் கேட்க முடியவில்லை! ராயலசீமா என்றால் ரத்தம் கொதிக்கிறது! வங்காளம் என்றால் வருங்கால சந்ததிகள் நம்மேல் காரி உமிழ்வார்கள்!

**இஸ்மத் பாஷா**

கிழக்கு வங்காளம்; நூற்றுக்கு எழுபது பேர்களுக்குமேல் முஸ்லிம்கள்! பட்டினியால் பரலோகம் போகிறார்கள்! பர்தாக்குள் இருந்த முஸ்லிம் மாதர்கள் விபசார விடுதிகளில் நுழைகிறார்கள்! பாலர்கள் பதறி சாகிறார்கள்! காலரா, மலேரியா மலைபோல் குவிக்கிறது முஸ்லிம் பிணங்களை! இஸ்லாம் மதம் போதிக்கும் அவ்வளவு தூய்மையும் துரும்பாகப் பறக்கிறது!

ஹிந்துக்களுக்கும் அதே கதி!

### மக்களைக் காப்பாற்ற

தேச ஜனங்களுக்கு சேவை செய்யும் ஸ்தாபனங்கள். காங்கிரஸ், முஸ்லிம் லீக்! ஜனங்களைக் காப்பாற்ற முடியவில்லை. அதிகார வர்க்கத்தின் யமன் நர்த்தனத்தைப் பார்த்துக்கொண் டிருக்கின்றன! பழைய சண்டை, விரோதம் பெரிதாகத் தோன்றுகின்றது! ஜனங்களைக் காப்பாற்ற ஒன்று சேருவது அவசியமாகத் தோன்றவில்லை! லக்ஷக்கணக்கான முஸ்லிம் பாமர மக்கள் மடிந்த பின்பு, வங்காளத்தில் "பாக்கிஸ்தானை" யார் கட்டிக்கொண்டு ஆளப்போகிறார்கள்! இஸ்பஹானி அண் கம்பெனியா! உயிர் நீத்த முஸ்லிம்களா! மூன்று மாதத்திற்குள் ஐம்பது லக்ஷம் ஜனங்கள் மடிந்தனர்!

சுயநிர்ணயக் கொள்கையை மறுப்பவர், எல்லா ஜனங்களையும்—விருப்பமில்லாத ஜனங்களையும்—வைத்துக்கொண்டு சுயராஜ்ஜியம் நடத்தப் போகிறார்கள்! லக்ஷக்கணக்கான மக்கள் மடிவதைப் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு! ஜனங்கள் செத்தாலும் சாகலாம்; நான் மட்டும் தேசிய இனங்களுக்கு சுயநிர்ணய உரிமையை (சுதந்திரத்தை) அங்கீகரிக்கமாட்டேன் என்று அவர்கள் கூறுகிறார்கள்?

எல்லா கக்ஷிகளும் சேர்ந்த கூட்டு மந்திரி சபை வங்காளத்தில் ஏற்பட்டிருந்தால் இந்த நிலைமை ஏற்பட்டிருக்காது! ஜின்னாவும் ஜவஹரும் உள்ள தேசிய சர்க்கார் இருந்தால் இவ்விதம் நடந்திருக்காது. மக்களைக் கொல்லும் கொள்ளை லாபக்காரர்களை தேசிய சர்க்கார் தூக்கிலிடும்! ஜனங்களைக் காப்பாற்றும்!

ஜனங்களைக் காப்பாற்றும் இந்தப் பணியில் ஒன்று சேருவதற்கு காங்கிரஸ் லீக் தேசபக்தர்கள் ஏன் தயங்க வேண்டும்? ஒருநாள் வீணாவதால் எத்தகைய நாசம் விளைகிறது? அதிகார வர்க்கத்தைப் பணிய வைத்து, தேசத் தலைவர்களை விடுதலை செய்து, தேசிய சர்க்கார் அமைத்து நாடு காப்பதற்கு—கோடிக் கணக்கான இந்தியர்களைக் காப்பாற்றுவதற்கு—ஒன்று சேருவதற்கு என்ன தயக்கம்!

# 400 பேர் கொண்ட தூதுகோஷ்டி

## கலெக்டரிடம் கோரிக்கைகளை வற்புறுத்தினர்

[ஈரோடு தாலூக்காவை சேர்ந்தவை கொல்லம்பாளையம், மூலப்பாளையம் ஆகிய கிராமங்கள். இந்த கிராமத்து பொதுமக்கள் விழித்தனர் ஒன்றுபட்டனர். உணவுக் கமிட்டி ஏற்படுத்தினர். தானிய ஸ்டோர் திறக்கப்படும் என்ற வாக்குறுதியும் பெற்றனர். இச்செய்தி 5-1-44 ஜனசக்தியில் வெளியாகியிருக்கிறது.]

மேற்படி கிராமங்களைச் சேர்ந்த மத்ய உணவுக் கமிட்டி 1-3-44 ல் கூடியது. தங்கள் வட்டாரத்தின் உணவுநிலைமையைபரிசீலனைசெய்த பின் பல தீர்மானங்கள் நிறைவேற்றினர். அரிசி விளைவிக்கும் இம்மக்கள் கம்புதான் சாப்பிடவேண்டுமென்று ஸ்தல அதிகாரிகள் தீர்மானித்தனர். அப்படி கொடுக்கப்படும் கம்பு ரூபாய்க்கு 2 படி 1 ஆழாக்குதான் கொடுக்கப்படுகிறது. இந்த அளவிலும் கல், மண்ணிற்குக் குறைவில்லை.

### குட்டிதேவதைகள் குறும்பு

ஜனங்களுக்கு இருக்கும் கஷ்டத்தை குட்டி அதிகாரிகள் வேறு அதிகப்படுத்துகிறார்கள். ஈரோடு கிராம முனிசீப்பிற்கு மண்ணெண்ணெய் விநியோக அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவரோ மாதத்தில் முதல் 15 தினங்களுக்கு மேல் எண்ணெய் இல்லை என்று சொல்லி விடுகிறார். ஆதலால் பலபேர் எண்ணெய் கிடைக்காமல் திண்டாடவேண்டி யிருக்கிறது. இதைஉணவுக்கமிட்டி பகிரங்கமாக விசாரிக்க வேண்டுமெனக் கோருகிறது.

மேற்சொன்ன குறைகளையெல்லாம் ஈரோடு டிப்டி கலெக்டரிடம் 2–3–44 ல் 400 பேர் கொண்ட தூதுகோஷ்டி சென்று தெரிவித்தது. 1. மண்ணெண்ணெய் விஷயமாக பகிரங்க விசாரணை, (2) அரிசிப் பங்கீடு, (3) அதிகமான கம்பு, (4) மூலப்பாளயத்தில் ஏற்படுத்துவதாக முன்னர் வாக்குறுதி கொடுத்திருந்த ஸ்டோரை உடனடியாக ஏற்படுத்துதல் என்ற உருப்படியான 4 கோரிக்கைகளைத் தெரிவித்தனர்.

### மக்கள் சக்தி

டிப்டி கலெக்டர் அதிக கம்பு வேண்டுமானால் மேல் அதிகாரிகளிடந்தான் தெரிவிக்க வேண்டுமென்றும், தான் ஒன்றும் செய்வதற்கில்லை என்று கூறிவிட்டார். கிராம முனிசீப் மண்ணெண்ணெய் இல்லை என்று கூறுவது சம்பந்தமாக விசாரணை நடத்துவதாகக் கூறுகிறார். மூலப்பாளையத்தில் சீக்கிரத்தில் ஸ்டோர் திறப்பதாக ஒப்புக்கொண்டார். அரிசி வேண்டுமென்றதற்கு முதலில் முடியாதென்று கூறிவிட்டார். தூதுகோஷ்டியார் விளக்கத்திற்குப் பிறகு டிப்டி கலெக்டர் வாரமொருமுறை நெல் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார்.

மக்கள் ஒன்றுபட்டு எழுந்தால் எதைத்தான் சாதிக்க முடியாது! உணவுக் கமிட்டி மூலம் வெற்றி பெற்ற இக்கிராமவாசிகள் மேலும் தங்கள் ஐக்யத்தின் மூலம் தங்கள் கோரிக்கைகளைப் பெறுவார்கள் என்பது நிச்சயம்.

பாலர் சங்கம்

### எல்லா பாலர்களும் சங்கத்தில்

குருக்குச்சாலை பிர்க்காவிலுள்ள சந்திரகிரி கிராமத்திலிருக்கும் பாலர் சங்கத்தின் 6 வது பொதுக்கூட்டம் தோழர் S. கிருஷ்ணனின் தலைமையில் 20-2-44-ல் நடந்தது. தேசிய கீதம் பாடப்பட்டது. காரியதரிசி சென்ற கூட்டத்தின் அறிக்கைவாசித்தார்.

கீழ்க்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன:—

1. குறுக்குச் சாலை பிர்காவிலுள்ள எல்லா பாலர்களையும் சங்கத்தின் மூலம் ஒன்று திரட்டி ஐக்கியப்படுத்துவது,

2. ஏற்கனவேயுள்ள "சேவிங்ஸ் பாங்க்" நிதியை இன்னும் அதிகமாகப் பெருக்குவது.

3 மார்ச் மாதக் கடைசிக்குள் பஞ்ச நிவாரணத்திற்காக ஒரு மூட்டை தானியம் சேகரிப்பது.

பாலர்களின் ஒற்றுமையும் உறுதியும் ஓங்குக!

### புதிய சங்கம்

நாட்டிலே தோன்றி வளர்ந்துவரும் பாலர் சங்கம் அறந்தாங்கி பாலர்களையும்ஆகர்ஷித்தது. 20–2–44ல் தோழர் V. பெரியய்யாவின் தலைமையில் ஒரு கூட்டம் நடந்தது. 19 பாலர்கள் வந்திருந்தனர். சோவியத், சீன பாலர்களின் வீரம், தந்திரம், தியாகம் முதலியவற்றைக் கேட்டனர். தங்களுடைய சங்கத்தை ஆரம்பித்திருக்கின்றனர்.

D. துரைராஜ் தலைவராகவும், ப. நாராயணசாமி காரியதரிசியாகவும், G. வீரராகவன் பொக்கிஷதாராக தேர்ந்தெடுக்கப்பட்டனர். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் கூட்டம் போடுவதென தீர்மானித்தனர்.

### இளங்கோவிற்கு தடை!

தோழர் இளங்கோவை உங்களுக்குத் தெரியும். அவர் சென்னை மாகாணத்திற்குள் நுழையக்கூடாது. இப்பொழுது திருவிதாங்கூர் சமஸ்தானத்தில் இருக்கிறார்.

அங்கு கட்சி வேலையைச் செய்து ரேஷனிங்கின் அவசியத்தைப்பற்றி பிரசாரம் செய்து வந்தார்.

இப்பொழுது 3 மாதத்திற்குளந்தக் கூட்டத்திலும் அவர் பேசக்கூடாது என்று A.S.P.யும்D.S.P.யும் நேரில் அழைத்து உத்தர விட்டிருக்கின்றனர்.

காரணம் "ரேஷனிங் முறையின் மூலம் சர்க்கார் லாபம் சம்பாதிக்கிறது" என்று பிரசாரம் செய்தாராம்!

### புதிய தொழிலாளர் சங்கம்

திண்டுக்கல்

இங்குள்ள சௌந்திரராஜா மில்லில் (பஞ்சாலை) சுமார் 350 தொழிலாளிகள் வேலை செய்கின்றனர், பெண்கள் 120 பேர் ஆண்கள் 230 பேர்.

மற்ற ஊர் மில்களில் கொடுக்கப்படும் சம்பள விகிதங்களைக் காட்டிலும் இவ்வூர்மில்லில் எல்லா டிபார்ட்மெண்டுகளிலும் மிகக் குறைந்த சம்பளமே கொடுக்கின்றனர். பஞ்சப்படியும் அவ்வாறே. மற்ற ஊர்களில் ரூபாய்க்கு 0-12-0, 0-14-0 வீதம் பஞ்சப்படி கொடுக்கின்றனர். ஆனால் இங்கு 0–10–0 அணாவுக்கு மேல் கிடையாது. இதற்கெல்லாம் சிகரம் வைத்தாற்போல் மில்லுக்குள் அடக்குமுறை தாண்டவமாடுகின்றது.

தேவைப் பொருள்களின் விலை மலைபோல் உயர்ந்துவரும் இந்நாளில் மிகக் குறைந்த சம்பளத்தையும் பஞ்சப்படியையும் பெற்று அத்தொழிலாளிகள் எவ்விதம் உயிர் வாழ்வது? உற்பத்தியைப் பெருக்கி மக்களுக்கு சரஸமான விலைகளில் துணி கிடைக்கச் செய்வது எங்ஙனம்?

இந்நிலைமையில் தங்களின் குறைகளைப் போக்க தாங்களே ஸ்தாபன ரீதியாக ஒன்றுதிரண்டால்தான் முடியும் என்று உணரலாயினர்.

தோழர் A.பாலசுப்ரமண்யம் பி.ஏ. பி.எல், தலைமையின் கீழ்கதவடைப்புக்கூட்டம் கூடி சங்கம் ஸ்தாபித்திருக்கின்றனர். அதற்கு A. பாலசுப்ரமண்யம், தலைவர், பி. ராமமூர்த்தி, (ஜனசக்தி ஆசிரியர்) உப தலைவர்; K. T. அரசு பொதுக்காரியதரிசி: K. V. ஸ்ரீராம் பொக்கிஷதார்—ஆகத் தேர்ந்தெடுக்கப்பட்டி

(4-ம் பத்தி பார்க்க)

(5-ம் பத்தி தொடர்ச்சி)

ருக்கின்றனர். மற்றும் 7 பேர்கள் நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளனர்.

கூட்டத்தில் (1) சங்கத்தை இந்திய ட்ரேட்யூனியன் சட்டத்தின்படி ரிஜிஸ்தர் செய்வதெனவும், (2) மாகாண தொழிற் சங்கக் காங்கிரஸுடன் இணைத்துக் கொள்வதெனவும் தீர்மானித்திருக்கின்றனர்.

கூட்டத்திற்கு வந்திருந்த 100 தொழிலாளிகளும் அங்கேயே சங்க அங்கத்தினராகச் சேர்ந்து கொண்டனர். தொழிலாளிகள் உற்சாகத்துடன் மேலும் மேலும் சேர்ந்து வருகின்றனர்.

# மகசூலைக் காத்தனர்

## ★ நல்லூர் விவசாயிகள் வெற்றி ★

### ஒற்றுமை சக்தி வென்றது

நல்லூர் என்ற கிராமம் தஞ்சை ஜில்லாவில் மன்னார்குடி தாலூக்காவில் இருக்கிறது. அந்த வட்டாரத்தில் உள்ள பெரிய மிராசுதார்களில் கோவிலூர் ஆதீனத்தைச் சேர்ந்த திருக்களார் மடத்தாரும் ஒருவர். அந்த மடத்தாருக்கு பத்துவேலி நிலங்கள் இருக்கின்றன.

அந்த நிலங்களில் வியர்வையைச் சிந்தி, நாளெல்லாம் பாடுபடும் விவசாயிகளின் குறைகள் பல என்று கூறினால் மிகையாகாது. தேசபக்தி கொண்ட விவசாயிகள்; காட்டில் பஞ்சம் பரவி பாமரரைப் பரலோகம் அனுப்பிவரும் செய்தி அவர்களுக்கு உணர்ச்சியை ஊட்டிற்று. சங்கம் சேர்ந்து பஞ்சம் போக்குவோம்; அதிக நெல் விளைவிப்போம்: குறைகளைப் போக்குவோம் என்று உணர்ந்தனர்.

அதன் பலனாய் ஜனவரி மாதம் 10ம் தேதியன்று "விவசாயிகள் சங்கம்" அமைத்தனர்.

இது மடத்தாருக்குப் பிடிக்கவில்லை. "சே! குடியானப் பசங்க சங்கம் சேர்ரதா!" என்று ஆத்திரமாத்திரமாக வந்தது.

வயல்களில் நெற்கதிர்கள் முற்றி, பழுத்துத், தலைவணங்கி, "உழைப்பைச்சிந்தியவன் வருவான்" என்று அறுவடையை எதிர்நோக்கி கின்றன.

#### சங்க பலம்

சங்கத்தைக் கண்டு கோபமடைந்த மடத்தார். 151 ஆட்களுடன் வந்து, அந்த வயல்களை ஆக்கிரமித்தனர்; தாங்களே அவ்வளவையும் அறுத்துக் கட்டிக் கொண்டு விடலாம் என்ற எண்ணம்தான்.

தனியாகச் சென்ற இரண்டு விவசாயிகளை அவர்கள் தாக்கி அடித்தார்கள். அந்த விவசாயிகள் இருவராலும் ஒன்றுஞ் செய்ய முடியவில்லை.

ஆனால் கிராமத்தில் உள்ள விவசாயிகள், இதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியுமா? அறுபது பேர்களை அங்கத்தினராகக் கொண்டிருந்த சங்கம் கிராமத்திலுள்ள எல்லா விவசாயிகளையும் அங்கத்தினர்களாகக் கொண்டது; கிராமம் பூராவும் ஒன்று திரண்டு எழுந்தது.

அவ்வளவுதான். ஆக்கிரமிப்பாளர்கள் பாடு; சமாதானம் செய்து கொண்டால் போதுமென்றாகி விட்டது.

சங்க ஊழியர் வி. ரங்கசாமியின் தலைமையில் விவசாயிகளின் கோரிக்கைகள் சமர்ப்பிக்கப் பட்டன. வெற்றி கிடைத்தது.

இதுதான் அவர்களுடைய வெற்றி:—தற்போது 100 கலத்திற்கு 33 1/3 கலம் வாரம் பெற்றனர்; மரக்கால் துண்டு இல்லாமல் மிராசுதாருக்கு நெல் அளக்க முடிந்தது; விவசாயிகளின் ஒற்றுமை சக்தி பெருகிற்று. 2-2-44ல் அடுத்த கிராமத்தில் நடந்த கூட்டத்திற்கு 250 விவசாயிகள் உற்சாகத்தோடு அணி வகுத்துச் சென்றனர்.

#### மகசூலைக் காத்தனர்

பைங் காட்டூர், வாலிவோடை, தென்பாதி என்ற கிராமங்கள் மன்னார்குடி தாலுக்காவில் இருக்கின்றன. அந்த வட்டாரத்தின் பெரும் பகுதி (150 வேலி நஞ்சை நிலம்) திருப்பனந்தாள் ஸ்ரீசாமிநாத தம்புரான் ஆதீனத்தைச் சேர்ந்தது.

இந்த வருடம் அந்த நிலத்தில் மகசூல் குறைவாகக் கண்டிருக்கிறது. ஆதலின் குத்தகை நெல்லைக் குறைத்துக் கொடுக்கும்படி அதைப் பயிரிடும் விவசாயிகள் பலமுறை கேட்டனர். தம்புரான் நிர்வாகம் எதற்கும் அசைந்து கொடுக்காததோடு அறுவடையை சஞ்சாயம் செய்யத் துணிந்தது; உழுத விவசாயிகளுக்கு "மணி நெல்லுக்கூடக் கொடுக்க மாட்டேன்" என்றது. மூன்னுக்கு நின்று வாதாடிய ராமசாமி கண்டியர், சிதம்பர மழவராயர் என்ற இரண்டு விவசாயிகளை, "அவர்கள் வேளாண்மை இட்ட வயல்களிலேயே கால்வைக்கக் கூடாது" என்று ஆதீன ஏஜெண்ட் உத்தரவிட்டார்.

12-2-44ல் மூன்று கிராமங்களையும் சேர்ந்த விவசாயிகள் ஒன்று கூடினர், ஒரு பொதுக் கூட்டம் போட்டனர்; 11 பேர்கள் அடங்கிய ஒரு கமிட்டியை அமைத்தனர்.

14ம் தேதியன்று வி. ரெங்கசாமியின் தலைமையில் ஒரு தூதுகோஷ்டி புறப்பட்டது. ஆதினத்து ஏஜெண்டைப் "பேட்டி" கண்டது; விவசாயிகளின் கோரிக்கைகளை எடுத்துரைத்தது. "நான் ஒன்றும் செய்வதற்கில்லை. திருப்பனந்தாளுக்குப் போய் கேட்டு வருகிறேன்" என்று வைஸ்ராய் முறையில் பதில் கூறி, அவர் திருப்பனந்தாளுக்குச் சென்று விட்டார்.

இந்த நிலைமையில் வயல்களில் நெற்கதிர்கள் பழுத்துத் தலைசாய்ந்துவிட்டன; நாலா புறங்களிலும் அறுவடை வெகு ஜரூராய் நடந்தது. ஆதீனத்து நிலங்கள் மட்டும் அப்படியே கிடந்தன.

#### அறிவித்தபின் அறுவடை

அறுவடைக்குக் காலதாமத மேற்பட்டால் பயிர் சேதமாகும்; சிறவிக் கூட்டங்கள் (பறவை) வயல்களில் விழுந்து மகசூலைப் பாழ்படுத்தின.

ஏற்கனவேயே மகசூல் குறைந்திருக்கிறது, இதில் மேற்கண்ட விதம் இன்னும் அதிகமாக உணவு பொருளை சேதமாக்குவதா!

நெல் வீணாவதற்கு விவசாயிகள் அனுமதிக்க முடியாது. உணவைப் பெருக்குவதும், காப்பாற்றுவதுமல்லவா அவர்களுடைய தேசபக்தி?

15-ம் தேதியன்று திருப்பனந்தாள் ஆதீனத்திற்கும், மன்னார்குடி கலெக்டருக்கும், விவசாயிகள் நோட்டீஸ் கொடுத்தனர்; தாங்களே அறுவடை செய்து, மணி நெல்லுக்கூட சேதமாகாமல் பாதுகாத்து வருகின்றனர். அறுவடை ஜரூராய் சேதமின்றி நடந்து வருகிறது.

20-ம் தேதியன்று, திருப்பனந்தாள் சென்றிருந்த ஏஜெண்ட் திரும்பினார்; கூட இரண்டு போலீஸ்காரர்களும் வந்தனர். விவசாயிகளை சமரசத்திற்கு அழைத்திருக்கின்றனர்.

(மேற்கொண்டு நடந்தவை, அடுத்த ரிப்போர்ட் கிடைத்தவுடன் வெளிவரும்).

# ஆயிரம்பேர்களின் அணிவகுப்பு அதிகாரியை இணங்கச்செய்தது

அம்பா சமுத்திரத்தில் ஏழைகளுக்காக வைக்கப்பட்டபண்டகசாலை நெல் இல்லாத காரணத்தால் ஒரு மாதத்திற்கு முன்பாகவே மூடப்பட்டது. லைசென்சு பெற்ற ஒரு வியாபாரியிடமே கொஞ்சம் ஸ்டாக் இருந்தது. அந்த டிப்போவில் ஒரே கூட்டம்; அடிதடி பட்டாவது கொஞ்சம் அரிசி கிடைத்து வந்தது. நெல் காலியாகி விட்டதால், ஒரு வாரத்திற்கு முன்பு அதுவும் மூடப்பட்டது.

பஜாரில் வேறு கடைகளில் அரிசி கிடையாது. எத்தனையோ குடும்பங்கள் பழக்க மில்லாத சோளம், கேப்பை முதலியவற்றை சாப்பிடுகிறார்கள். இதன் பயனாய் தொத்து நோய் வேறு (சிரங்கு முதலியன) ஜனங்களிடையே பரவிவருகின்றது. பக்கத்து ஜில்லாவாகிய திருவிதாங்கூரிலிருந்து சாப்பாட்டிற்கு இல்லாமல் வந்திருக்கும் கூட்டம் வேறு. வீடுகளில் அவர்களுக்குப் பிச்சை சாப்பாடு கிடைப்பதும் நின்றுவிட்டது.

#### கள்ள மார்க்கெட்

இந்த நிலைமையில் பிசான அறுவடையும் பதினைந்து தினங்களாகத் தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது. அறுவடை நெல் மாயமாய் மறைந்து கொண்டிருக்கிறது. சர்க்காரின் நிர்ணய விலை கோட்டை (112 பட்டணம் படி) ஒன்றுக்கு ரூ. 21. கள்ள மார்க்கெட்டின் விலை 30, 35க்குக் கூடிவிட்டது. அதற்கும் நெல் கிடைப்பதில்லை. காரணம்—சர்க்கார் திட்டப்படி 47000 கோட்டை நெல் கைப்பற்றப்பட்டது. சர்க்கார் திட்டப்படி பாக்கி 2½ லக்ஷம் கோட்டை நெல் இருக்கிறது. அந்த நெல்லை சர்க்கார் உத்தரவில்லாமல், யாருக்கும் விற்கக்கூடாது என்று மிராசுதார்களுக்கு சர்க்கார் நோட்டீஸ் கொடுக்கப்பட் டிருக்கிறது. இதைக் காரணமாக வைத்துக்கொண்டு நிலச்சுவான்தார்கள் சில்லரையில் நெல்லைக் கொடுக்க மறுத்து, இரவோடுஇரவாக திருட்டுத்தனமாக கள்ளமார்க்கெட்டில் ரூ. 30, 35க்கு விற்றுவருகிறார்கள்.

அறுவடை நடந்துகொண்டு இருக்கும்போதே விலை35 ஆக உயர்ந்தால் இன்னும் இரண்டு மாதங்கள் கழிந்தால் நிலைமை நிரம்பவும் சீர்குலைந்துவிடும்; பட்டினிசாவை விலை கொடுத்து வரவழைப்பதாகும்.

அதிகாரவர்க்கம் இந்த நிலையில் என்ன செய்கிறது!

கள்ள சேமிப்பைக் கண்டுபிடிக்கவும், சேமிப்புக் கிடங்குக்கு நெல் போகாமல் தடுக்கவும் கிராம உத்தியோகஸ்தர்களை நம்பிக் கொண்டு இருக்கிறார்கள்; பொதுஜன உணவுக் கமிட்டியை அங்கீகரிக்கவில்லை; அதன் ஒத்துழைப்பை உதறித்தள்ளுகிறார்கள். கிராம அதிகாரிகளும், கள்ள சேமிப்புக்காரர்களும் ஒரு படுக்கையில் படுத்து உருளுகிறார்கள்.

#### அணிவகுப்பு

27-2-44-ம் தேதியன்று உணவுக் கமிட்டியின் கிளைக் கமிட்டிகளாகிய தெருக்கமிட்டிகளைக்கூட்டி நிலைமை விவாதிக்கப்பட்டது.

29.2-44ல் ஜனங்கள் திரண்டனர். ஆயிரம் பேர்கள் கொண்ட அணிவகுப்பு; கைத்தறி நெசவாளர்கள் வேலைக்கே செல்லவில்லை; வேலையை அந்தந்த இடத்தில் போட்டுவிட்டு கிளம்பினார்கள். இருநூற்று ஐம்பது பெண்களும் கலந்துகொண்டனர். 'இன்று அரிசியில்லே, வீட்டிலிருந்து என்ன செய்வது! நாங்களும் ஒன்று சேர்ந்தால்தான் நாளைக்கு அடுப்பெரியும்" என்று பெண்கள் கூறினார்கள். அணிவகுப்பு தாசில்தாரிடம் சென்றது. "உடனடியாக அரிசி வேண்டும்" என்று ஜனசக்தி வற்புறுத்திற்று.

இரண்டொருவர் அல்ல; ஆயிரம் பேர்கள்!

"சரி, நெல் தருகிறேன்" என்று அவர் இணங்கினார். அதோடு மட்டுமில்லை. "கள்ள சேமிப்பைக் கண்டுபிடியுங்கள்; நான் நடவடிக்கையெடுக்கிறேன்" என்றும் அவர் ஒப்புக்கொண்டார்.

(ந. நி. 29-2-44.)

செங்கம்

#### விவசாயிகள் கூட்டம்

செங்கம் லெனின் தியேட்டரில் வட ஆற்காடு ஜில்லா விவசாயிகள் சங்கத்தின் ஜெனரல்பாடி கூட்டம். 26–2–44ல் நடந்தது. தமிழ்நாடு விவசாயிகள் சங்க தலைவர் தோழர் B. சீனிவாச ராவ் தலைமைவகித்தார். அந்தக் கூட்டத்தில் 9 அங்கத்தினர்களைக் கொண்ட நிர்வாகக் கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. தோழர் D.S. உஸ்மான் காரியதரிசியாகவும், தோழர் எஸ். கோபால் ரெட்டியார் தலைவராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அன்று மாலை தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்தின் உபகாரியதரிசி தோழர் லலிதா அண்ணாஜியின் தலைமையில் நடந்த பொதுக்கூட்டத்தில்,இரவு 10–45 மணிவரை, நிறைய விவசாயிகள் ஆர்வத்துடன் உட்கார்ந்திருந்தனர்; உணவைப் பெருக்குவோம் என்று உறுதி கூறினர். (இதுதான் 1942 ஆகஸ்டுக்குப் பின் நடந்த முதல் கூட்டம்)

#### நாகையில் "வெடிகுண்டு"

இரண்டு மாதங்களுக்கு முன்னால் "ஜனசக்தி"யில் வெளிவந்த "வெடிகுண்டு" என்ற தொடர் கதையை நாகப்பட்டணம் மெதாடிஸ்ட் மிஷன் ஹைஸ்கூல் பழைய மாணவர் சங்க இரண்டாவது ஆண்டு விழாவன்று; மாணவர்கள் நாடகமாக நடித்துக் காட்டினர். மேற்சொன்ன கதையை இயற்றியவர் ஜனசக்தி உதவி ஆசிரியர் கே. பாலதண்டாயுதம்.

# உணவைக் காக்க விவசாயிகள் தூது

குட்டூர் என்பது காவேரிப்பட்டணம் சங்கத்திற் குள்ளடங்கிய ஒரு சிறு மிட்டா கிராமம். அதற்கடுத்தது தளிகப்பட்டி; அதுவும் ஒரு மிட்டா கிராமம்.

தளிகப்பட்டியில் ஏதுவாய் என்ற ஏரி ஒன்று இருக்கிறது அதில் இன்று தேங்கி இருக்கும் தண்ணீர், ஒரு வருடத்திற்குப் பயிர் செய்யப் போதும்.

ஆனால் மிட்டாதாருக்கு ஆசை அதிகம். ஏரியை இரண்டு முழம் தூக்கிக் கட்டினால், இன்னும் அதிகமாகத் தண்ணீரைத் தேக்கலாம் என்று நினைத்து, கரையைத் தூக்கிக் கட்ட ஆரம்பித்துவிட்டார். அந்த ஏரியை மராமத்துப் பார்க்கத்தான் சர்க்கார் கூறிற்றே தவிர, கரையைத் தூக்கிக் கட்ட சொல்லவில்லை; சரியான 'லெவலை'ப் பார்த்த என்ஜினீயரிங் டிபார்ட்மெண்டும் அப்படிக் கூறவில்லை. மிட்டாதாரே அவ்விதம் செய்கிறார்.

ஏதுவாயைத் தூக்கிக் கட்டினால் என்னவாகும்!

தூக்கிக் கட்டுவதால் குட்டூர், கிராமம் நீரில் மூழ்கிவிடும்; குட்டூர், குடியரசம்பட்டி ஆகிய ஊர்களைச் சுற்றியுள்ள சுமார் 400 வள்ள விரைபாடு (சுமார் 300 ஏக்கரா நிலங்களுக்கு மேல்) நீரில் மூழ்கிவிடும். இன்று ஒருநாளைக்கு அதிகமாக மழை பெய்துவிட்டால், கார் அறுவடைக் கூட நாசமாகும்.

உணவுப் பெருக்கை தேசபக்தியாகக் கொண்ட விவசாயிகள் இதை அனுமதிக்க முடியுமா?

ஒருக்காலும் முடியாது.

பிப்ரவரி மாதம் 26-ந் தேதியன்று தோழர் வாசன் தலைமையில் 50 விவசாயிகள் கிருஷ்ணகிரிக்கு நடந்து சென்றனர். ஓசூர் சப் கலெக்டரை சந்தித்தனர். இன்று இருக்கும் அளவிலேயே ஏரி இருக்கவேண்டும் என்பது எவ்வளவு நியாயமானதென்பதை எடுத்துக் கூறினர்.

கவனிப்பதாக கலெக்டர் கூறியிருக்கிறார்.

(அடுத்த ரிப்போர்ட்டில் மேற்கொண்டு நடந்தவை வெளிவரும்.)

# கொரட்டி-தட்டட்டி விவசாயிகள்

கொரட்டி, தட்டட்டி கிராமங்கள் இரண்டும் சேர்த்தாற்போல் உள்ளவை; ராமநாதபுரம் ஜில்லா, திருப்பத்தூர் தாலூகாவில் இருக்கின்றன. ஜனத் தொகை 1700.

சுமார் 900 ஏக்கர் நிலத்தில் விவசாயம் செய்கின்றனர்; நிலத்தில் பெரும்பாகம் தர்மாஸனம். அதாவது விளைச்சலில் நேர்பாதி மேல் வாரதாரர்களுக்குக் கொடுக்க வேண்டும்.

6 மைல் தூரத்திலுள்ள காரைக்குடியிலும், திருப்பத்தூரிலும் அரிசி ரேஷனிங் அமுலிலிருந்து வருவதால், அந்த டவுன்களில் இனிமேல் கிராமவாசிகளுக்கு அரிசி கிடைக்காது; கிராமத்தில் விளைந்த நெல்லை மேல் வாரதார் கிராமத்திலிருந்து எடுத்துச் சென்றுவிட்டால், கிராமவாசிகளின் நிலைமை என்னவாகும்! பயிரிட்டவன் பதறிச் சாவான். ஆதலின் மேல்வாரதார் நெல்லுக்கு பதில் ரூபாய் வாங்கிக்கொள்ள வேண்டும்; கிராமத்தில் கோவாப்பரேடிவ் ஸ்டோர் ஏற்படுத்தவேண்டும்; கிராமத்தின் தேவைக்கு அவசியமான நெல்லை வைத்துக்கொண்டு, உபரி தானியத்தை அந்தச் சங்கத்தின் மூலம், மற்ற பற்றுகுறை கிராமங்களுக்கு அவற்றை விற்கவேண்டும்; பயிரிட்டவன் பட்டினியால் வாடமாட்டான்; பக்கத்தில் பஞ்சம் தலைநீட்டாது; அடுத்தபடியாக விவசாயிகள் அதிக நெல்லை உற்பத்தி செய்ய முடியும்.

அதோடு கிராம ஜனங்களுக்கு வீட்டில் விளக்கெரிக்க எண்ணெய் கிடைக்கவில்லை.

இந்தக் கோரிக்கைகளை நிறைவேற்றவும், அதிக உணவு பொருளை விளைவித்து நாடு காக்கவும் விவசாயிகள் ஒன்று சேரவேண்டும்.

19–2–44-ல் விவசாயிகள் ஒன்று சேர "விவசாயிகள் சங்கம்" ஏற்படுத்தப்பட்டது. 1943-ம் வருடம் அங்கத்தினர்கள் 44. 1944-ம் வருடம் 100-க்கு 100 விவசாயிகளும் அங்கத்தினர்களாக சேர்ந்து, சங்கத்தை பலப்படுத்துவார்கள் என்று நம்புகிறோம்.

# ஆஸ்திரேலிய தொழிலாளர் கோரிக்கை

### "இந்தியத் தலைவர்களை விடுதலை செய்க"

கிலாங் (ஆஸ்திரேலியா) மாகாண தொழிலாளர் மகாநாடு கீழ்கண்ட தீர்மானத்தை ஏகமனதாக நிறைவேற்றி யிருக்கிறது :—

"இந்தியாவிற்கு ஆஸ்திரேலிய சர்க்கார் உணவுப்பொருள் அனுப்பியதை இந்த மகாநாடு பாராட்டுகிறது. இன்னும் எவ்வளவு அனுப்ப முடியுமோ அவ்வளவு உணவுப் பொருளும், வைத்திய உதவியும் அனுப்ப வேண்டும் என்று வற்புறுத்துகிறது."

மேலும், சமீபத்தில் நடந்த இந்திய அஸெம்பிளி உபதேர்தல்களில் காங்கிரஸ் கட்சி அடைந்த வெற்றியிலிருந்து, ஜனங்களுடைய ஆதரவுயார் பக்கம் இருக்கிறதென்பது தெளிவாகும். யுத்த முயற்சியை இன்னும் அதிகமாக ஒன்றுதிரட்டுவதற்கு காங்கிரஸ் கட்சியை சேர்ந்த எல்லா பாஸிஸ்ட் எதிர்ப்பு தலைவர்களையும், விடுதலை செய்வதற்கு, ஆஸ்திரேலிய சர்க்கார், பிரிட்டிஷ் சர்க்காரை வற்புறுத்த வேண்டும் என்று இம் மஹாநாடு கூறுகிறது."

மணப்பாறை

# தியாகராஜேஸ்வரர் ஆலைத் தொழிலாளர் கோரிக்கை

இங்கு தினம் 10-மணிதான் வேலை நேரம் என்று நியதி. ஆனால் அது காகித அளவில்தான்.

ப்ளோ ரூம் டிபார்ட்மெண்டில் மிஷினில் வேலை செய்பவர்கள் 5 பேர். இவர்கள் தினம் 10½-மணி வரை வேலை செய்யவேண்டிய நிர்பந்தம். மேலும் கெடியாரத்திற்கு சரியாக சாவி கொடுக்காததால் அது அடிக்கடி நின்றுவிடுகிறது. இதன் மூலமும் தொழிலாளிகளிடம் அதிக நேரம்வேலை வாங்குகின்றனர். அது மாத்திரமல்ல. ஒரு வாரத்தில் 5 நாள் ஓவர் டயம் வேலை செய்யவேண்டும். அதுவும் ஒரே ஷிப்ட்தான். இதனால் தொழிலாளிகளுக்கு மிகவும் உடல் சிரமமேற்படுகிறது.

ஆதலால் இதை 2 ஷிப்டாக மாற்ற வேண்டுமென்று தொழிலாளிகள் கோருகின்றனர். ஆனால் 'முதலாளிகளோ இது எங்கள் இஷ்டம்; இல்லாவிடில்வீட்டுக்குப்போ' என்று கூறிவிடுகின்றனர்.

மேலும், ஸ்பின்னிங் டிபார்ட்மெண்டில் கடந்த ஒரு மாத காலமாக 10½ புல்லி (pulleys) களுடன் மெஷீன்கள் ஓடிக்கொண்டிருந்தன. இதனால் மெஷின்கள் யாதொரு தடையுமின்றி நன்றாக ஓடிக்கொண்டிருந்தன. ஆனால் முதலாளிகள் மிஷின்களை அதிக வேகமாக ஓட்டும் நோக்கத்துடன் 7¾ புல்லிகளாகக் குறைத்துவிட்டனர். இதனால் மிஷினில் லத்தாடு அதிகமாயிற்று. தொழிலாளிகளுக்கும் கமிஷன் குறைந்தது.

இதுமாத்திரமல்ல. தொழிலாளிகளுக்கு அசௌகரிய மேற்பட்டாலும் கூட லீவ் கொடுப்பதில்லை. லீவ் கேட்டால் 'ஆப்ஸெண்டாய் விடு. அல்லது கணக்கைத் தீர்த்து விட்டு போய்விடு' என்கின்றனர். இதனால் சில தொழிலாளிகள் ஆத்திரங் கொண்டு, உற்பத்தியைக்கூட கவனியாமல் வேலையைவிட்டுப் போய்விட்டனர், நைட் ஷிப்டில் ஒவ்வொரு நாளும் 5, 6 மெஷின்கள் வேலையின்றி நிற்கின்றன.

மேலும் தொழிலாளிகளைப் பிளவுபடுத்த இன்னொரு சூழ்ச்சியும் கையாளுகின்றனர். மதுரையிலிருந்து சில தொழிலாளிகளைக் கூட்டிக்கொண்டு வந்திருக்கிறார்கள். இவர்களுக்கு பஞ்சப்படி உட்பட மாதம் 38 ரூபாய் கொடுக்கின்றனர். ஆனால் உள்ளூர் தொழிலாளிகளுக்கு 28 ரூபாய்தான் கொடுக்கின்றனர்.

ஸ்டோரிலிருந்து அரிசி கொடுப்பதிலும் 4 தொழிலாளிகள் சேர்ந்து போனால்தான் ஒரு மூட்டை கிடைக்கும். அதுவும்; மேஸ்திரி, மாஸ்டர், டயம் கீபர், ஸ்டோர் கீபர்—இவ்வளவு பேருடைய கையெழுத்துக்களும் இருந்தால்தான் கிடைக்கும்! சங்க பலமொன்றே குறைகளைப் போக்கும்.

# தேர்தலை நடத்து!

## பிற்போக்கு ஒழியட்டும்! ஜனநாயகம் நிலவட்டும்!

சென்னை

தொழிற்சங்க மென்பது தொழிலாளிகளின் அபிலாஷைகளைப் பிரதிபலிக்கும் ஓர் ஜனநாயக ஸ்தாபனம்; தொழிலாளிகளின்தேர்ந்தெடுத்த பிரதிநிதிகளைக்கொண்ட ஸ்தாபனம். இந்த உண்மையை எந்தத் தொழிற்சங்க வாதியும் மறுக்கமுடியாது. இதனால்தான் எல்லாத் தொழிற்சங்க ஸ்தாபனங்களும்,—அகில இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரஸ், மாகாணத் தொழிற்சங்கக் காங்கிரஸ்கள்—தென் இந்திய ரயில்வே தொழிலாளர் சங்கம், M. S. M. ரயில்வே தொழிற்சங்கம் முதலிய எல்லா தொழிலாளர் சங்கங்களும்—வருஷாவருஷம்சங்கநிர்வாகிகள்தேர்தலை நடத்துகின்றன. அதில் சங்கத்திற்குத் தலைவர், உபதலைவர், காரியதரிசிகள், பொக்கிஷதார், நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்கள்—முதலியவர்களைத் தேர்ந்தெடுக்கின்றனர்.

### தொழிலாளிகளைக் கண்டு பயம்

ஆனால் சென்னையிலுள்ள "சென்னைத் தொழிலாளர் சங்கம்" (M.L.U.) மாத்திரம் மேற்சொன்ன நியதிக்கு விதிவிலக்கு என்று அதன் தலைவர்கள் கருதுகின்றனர். கடந்த 3 வருஷங்களாக அச்சங்கத்தில் நிர்வாகிகள் தேர்தலே கிடையாது.

காரணமென்ன? இன்று சென்னைத் தொழிலாளர் சங்கத்தில் பதவி வகிக்கும் தலைவர்கள் தொழிலாளிகளைக் கண்டு பயப்படுகிறார்கள். தொழிலாளிகளின் உண்மைப் பிரதிநிதிகள் சங்க நிர்வாகத்தில் பங்கெடுத்துக்கொள்வதைக்கண்டு அஞ்சுகிறார்கள். தொழிலாளிகள் எக்கேடு கெட்டாலும் தங்கள் பதவியைக்காப்பாற்றிக் கொள்வதே பிரதானமெனக் கருதுகின்றனர். உண்மைத் தொழிலாளிகளின் பிரதிநிதிகள் சங்கத்தின் நிர்வாகத்திற்கு வந்தால் தங்களின் பிற்போக்குத்தனம் தொழிலாளிகளுக்கு வெட்ட வெளிச்சமாய் விடுமே என்ற பீதிதான் இவர்களுக்கு.

மேலும் கடந்த 3 ஆண்டுகளாக இந்தத் தலைவர்கள், சங்கத்தில் எல்லாத் தொழிலாளிகளும் சேருவதைக் கூடத் தடைசெய்து வந்துள்ளார்கள்.

### பெருமைக்கு துரோகம்

சென்னையிலுள்ள பக்கிங்ஹாம் கர்நாடிக் மில்லில் சுமார் 15,000 தொழிலாளிகள் வேலை செய்கின்றனர். ஆனால் இதில் 1000 பேர் கூட இன்று சங்கத்தில் கிடையாது. இந்த சங்கம் இகில இந்திய தொழிற் சங்கக் காங்கிரஸுடன் இணைந்திருக்கிறது. ஆனால் கடந்த 3 வருடங்களாக A. I. T. U. C.க்குச் செலுத்த வேண்டிய சந்தாத் தொகையையும் கூட செலுத்தவில்லை. இவ்வளவுக்கும், இந்த சங்கம்தான் இந்தியாவிலேயே தோன்றிய முதல் தொழிற் சங்கம் என்ற பெருமை வேறு! இதன் தலைவர்கள் இன்று அந்தப் பெருமையைக் காலால் துவைத்து மிதித்துவிட்டார்கள் என்றே சொல்லவேண்டும்.

மேலும் தொழிலாளிகளின் சாதாரணக் குறைகளையுங்கூட, எடுத்துக்கொண்டு அதற்குப் பரிகாரம் தேட, தொழிலாளிகளைத்திரட்டிக் கிளர்ச்சி செய்தது கிடையாது. இந்த சங்கத் தலைவர்கள்.

### துரோகிகளுடன் உறவு

அது மாத்திரமா! இச்சங்கத் தலைவர்கள் தொழிலாளிவர்க்கத் துரோகிகளுடன் சேர்ந்து கொண்டுள்ளார்கள். ராடிகல் டெமாக்ரேடிக் கட்சி (தீவிர ஜனநாயகக் கட்சி) என்ன என்பது வாசகர்களுக்குத் தெரிந்திருக்கும். சீனப் புரட்சிக்கு துரோகம் செய்துகாட்டிக் கொடுத்த M. N. ராயின் தலைமையிலுள்ள கட்சி அது. தேசீயக் காங்கிரஸை பாசிஸ்டு ஸ்தாபனம் என்று அமெரியின் பாட்டைப்பாடும் கட்சி அது. 25,000 ரயில்வே தொழிலாளிகளை உடைய தென்னிந்திய ரயில்வே தொழிற்சங்கத்தையும் மற்றுமிரு ர. தொ. சங்கங்களையும் ரயில்வே தொழிலாளர் சம்மேளனத்திலிருந்து பிரித்து ஒதுக்கிய ஜம்னுதாஸ் மேத்தாவைக் கொண்ட கட்சி அது. பின் ஏ. கே. பிள்ளை—இவர் எத்தனை தொழிலாளி வர்க்கப்போராட்டங்களில் கலந்துகொண்டு, தொழிலாளிகளுடன் தோளோடு தோள்கொடுத்து அவர்களின் குறைகளுக்காகப் பரிந்து பேசியிருக்கிறாரென்பதைத் தொழிலாளிகள் அறிவர்!

இந்த ஏ. கே. பிள்ளை இன்று—இந்தியாவில் துரோகம் செய்தது போதாதென்று இங்கிலாந்துக்குச் சென்றும், அமெரிக்கு ஒத்து ஊத லண்டன் சென்றிருக்கிறார். இவரையும் கொண்டுள்ளது இந்த ராடிகல் டெமாகிராடிக் கட்சி, இக்கட்சியையும் இவர்களையும் ஆதரித்து நிற்கின்றனர் இந்த சங்கத் தலைவர்கள்!

### வசைமாரி

இதுமட்டுமா? N. M. ஜோஷியை பொதுக் காரியதரிசியாகவும், S. A. டாங்கேயை தலைவராகவும், சுமார் 5 லக்ஷம் தொழிலாளிகளை அங்கத்தினராகவும் கொண்டுள்ள அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸை (A. I. T. U. C.) எதிர்த்து M. N. ராய் இந்திய லேபர் பெடரேஷன் என்ற ஒரு போட்டி-பொம்மை-ஸ்தாபனத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார். இதை ஆதரிக்கிறார்கள் சென்னைத் தொழிற் சங்கத்தின் தலைவர்கள்.

இதையெல்லாம் எடுத்துச் சொன்னால் "இவர்கள் கம்யூனிஸ்டுகள்; சங்கத்தைக் கைப்பற்றிக் கொள்ள முயற்சி செய்கிறார்கள்" என்றெல்லாம் இச்சங்கத்தார் பிரசாரம் செய்கின்றனர்.

சமீப காலமாக இச்சங்கத் தலைவர்கள் சில கூட்டங்களை சங்கத்திற்குள்ளும், வெளியிலும் நடத்தி வருகின்றனர். இந்தக் கூட்டங்களிளெல்லாம் கம்யூனிஸ்டு-எதிர்ப்புப் பிரசாரம்தான். கம்யூனிஸ்டுகளைத் திட்டுவதுதான். சங்கத்தில் தேர்தலை நடத்துங்கள் ஜனநாயக முறையில் சங்கத்தை நடத்துங்கள் என்றால் இவர்களுக்கு இவ்வளவு கோபம் வரக் காரணமென்ன!

கம்யூனிஸ்டுகள் நோக்கம், கம்யூனிஸ்டுகள் கேட்பதெல்லாம் சங்கத்திற்கு தேர்தலை நடத்துங்கள்; சங்கத்தில் எல்லாத் தொழிலாளிகளையும் சேரச் செய்யுங்கள்; சங்கத்தை ஜனநாயக முறையில் நடத்துங்கள். தொழிலாளிகளின் அன்றாடக் குறைகளைத் தீர்க்கத் தொழிலாளிகளைத் திரட்டிப் போராடுங்கள். ஜனங்களின் துணிப் பஞ்சம் போக்க உற்பத்தியை அதிகரிக்கத் தொழிலாளிகளுக்கு ஊக்க மூட்டுங்கள் என்பதே. இதுதான் தொழிற் சங்கத்தின் கடமை. இதை யார் மறுக்க முடியும்?

### கடமை

ஆதலால், இனியும் 15,000 தொழிலாளிகளின் கதியை இந்தப் பிற்போக்காளர்கள் கையில்விட முடியாது; தொழிலாளிகள் பத்தாயிரக் கணக்கில் சங்கத்தில் சேர வேண்டும். புதிய தேர்தல் நடத்த வேண்டும். உண்மைத் தொழிலாளர் பிரதிநிதிகளை சங்க நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். ஜனநாயக முறையில் ஸ்தாபனத்தை நடத்த வேண்டும். இதற்கு முன் வந்து கிளர்ச்சி செய்வதே வர்க்க உணர்ச்சிபெற்ற 15,000 பி. அன் ஸி. மில் தொழிலாளிகளின் கடமை.

---

# தெ. இ. ரயில்வே

## கிளர்க்குகள் மகாநாடு

பொன்மலையில் தொடர்ந்தாற்போல் நடைபெறுகின்றன; கடந்த மாதம் டிராபிக் உத்தியோகஸ்தர்கள் மகாநாடு வெகு விமரிசையாக நடைபெற்றது. இந்த மாதம் 18, 19-ந் தேதிகளில் குமாஸ்தாக்கள் மகாநாடு நடைபெறப் போகிறது. தோழர் புக்காரி மகாநாட்டில் கலந்து கொள்ளுவாரெனத் தெரிகிறது.

குமாஸ்தாக்கள் தனி மகாநாடு நடத்துவதுதான் இதில் குறிப்பிடத்தக்கது. பொதுவாக ரயில்வேத் தொழிலாளர்களிடையே படித்தவர்கள் (பள்ளிக்கூட படிப்பு) படிக்காதவர்கள் என்ற வேற்றுமை இருந்து வந்தது. டிராபிக் மகாநாட்டுடன் பாதிக்கு மேல் இந்த வேற்றுமை ஒழிந்தது. வருகிற குமஸ்தாக்கள் மகாநாட்டுடன் இந்த வேற்றுமை அறவே ஒழிந்து எல்லோரும் ஓரினம் எல்லோரும் ஓர்குலம் என்கிற ஒற்றுமை வளரும். நூற்றுக்கு நூறு பலம் கொண்ட சங்கமான தென்னிந்திய ரயில்வே தொழிற்சங்கம் வளருவதை யாரும் தடுக்கமுடியாது. ரயில்வே நிர்வாகத்தின் சூழ்ச்சிகளனைத்தையும் முறியடித்துவிட்டு, ஒரே சங்கத்தின்கீழ் ஒன்று திரண்டுவிட்டனர் தென்னிந்திய ரயில்வேயிலுள்ள தொழிலாளரனைவரும். இதன் அறிகுறிதான் இவ்வாறு தனித்தனி மகாநாடுகள் நடைபெறுவது.

தென்னிந்திய ரயில்வே மிக லாபகரமாக நடைபெறும் ரயில்வேக்களில் முதல் ஸ்தானம் வகிப்பது. ஆனால் தொழிலாளர்களுக்குக் கொடுக்கும் சம்பள விகிதத்தில் கருமித்தனம்; தொழிலாளர்களைப் பிளவுபடுத்தும் முறையில்தான் சம்பள விகிதங்கள். குமாஸ்தாக்களின் சம்பளம் ரூ. 25 லிருந்து ஆரம்பம். பி. பி, அண்டு சி. ஐ. முதலிய ரயில்வேக்களில் காங்கி தொழிலாளர்களுக்கும், பாயிண்ட்ஸ்மென்களுக்கும் இதைவிட அதிக சம்பளம் கிடைக்கிறது.

தேசத்திலுள்ள அரசியல் நிலைமையைப் புறக்கணித்துவிட்டு, நாட்டு மக்களின் தேவையை அலக்ஷியம் செய்துவிட்டு தொழிலாளர்கள் தங்களுடைய வாழ்க்கையில் மேம்பாடு பெறமுடியாது. இந்த உண்மையை நன்கு போதித்து வருவது தென்னிந்திய ரயில்வேத் தொழிற்சங்கம். இந்த சங்கக் கொடியின்கிழ் குழுமும் குமாஸ்தாக்கள், தேசபக்தியிலும், மக்களுக்கு சேவைசெய்யும் ஆர்வத்திலும், சகோதரத் தொழிலாளர்களுடன் ஒற்றுமையை வளர்ப்பதிலும் முக்கிய கவனம் செலுத்துவார்கள். இது ஒன்றுதான் தொழிலாளர்களைப் பலப்படுத்தி நியாயமான கோரிக்கைகளுக்கு அதிகார வர்க்கத்தை இணங்க வைக்கும் மார்க்கம்.

---

# திடீர் "டிஸ்மிஸ்"

## தொழிலாளர் கட்டுப்பாட்டைக் குலைக்க முதலாளிகள் சூழ்ச்சி

விக்ரமசிங்கபுரம்

விக்ரமசிங்கபுரம் மில் மேனேஜ்மெண்டும், நாயுடு சங்கத்தாட்களும் பஞ்சாலை (செங்கொடி) சங்கத்தை ஒழிக்க, அந்த சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளிகளை வேலையை விட்டு நீக்குவது, சஸ்பெண்ட் செய்வது, ரௌடிகளைக் கொண்டுதாக்குவது போன்ற பல சூழ்ச்சிகளைச் செய்து வந்தனர். ஆனால் இவைகளை யெல்லாம் சமாளித்து பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் வளர்ந்து வந்துள்ளது.

இந்நிலைமையில் மறுபடியும், மில் மானேஜ்மெண்ட் தன் மழுங்கிய ஆயுதத்தையே பிரயோகிக்க முன் வந்திருக்கிறது.

சென்ற ஒரு மாதகாலமாக ஒரு பலத்த வதந்தி உலவி வந்தது. மில்லில் ஒவ்வொரு டிபார்ட்மெண்டிலும், உள்ள நம் சங்க பிலிடெண்டுகளின் பெயர், நம்பர், முதலிய விபரங்களை யெல்லாம், அந்தந்த டிபார்ட்மெண்டிலுள்ள நாயுடு ஆசாமிகளின் மூலம் கேட்டுத் தெரிந்துகொள்வது; இவர்கள் மீது ஏதாவது சிறு புகார்கள் வந்தாலும் அதை சாக்காகக்கொண்டு டிஸ்மிஸ் செய்வது என்று மானேஜ்மெண்ட் திட்டமிட்டிருப்பதாக வதந்திகள் உலவின.

### டிஸ்மிஸ்! டிஸ்மிஸ்!!

18–2–44-ந் தேதியன்று நம் சங்கத்தைச் சேர்ந்த மாரிமுத்து என்பவர் டிஸ்மிஸ் செய்யப்பட்டார். அவர் உடம்பு அசௌகரியத்தால் டாக்டரிடம் லீவுக்கு சிபார்சு செய்யும்படி கேட்கச் சென்றார். டாக்டர் லீவு கொடுக்க மறுத்துவிட்டார். டாக்டரிடம் இது விஷயமாக் வாதாடினதில் நேரம் ஆய்விட்டது.

மில்லுக்குச் சென்றதும் டிஸ்மிஸ்; காரணம் ½ மணி நேரம் லேட்டாம்!

இதே மாதிரி, 24–2–44-ந் தேதியன்று நயினார் செட்டியார் என்ற மற்றொரு தொழிலாளி டிஸ்மிஸ். இவர் 6 மைல் தூரத்திலுள்ள ஊர்காட்டிலிருந்து சைக்கிளில் வருபவர். 23–2–44-ந் தேதி வருகிற வழியில் சைக்கிள் பழுதாய்விட்டது. அதனால் ½ மணி நேரம் தாமதம். இதை சாக்காக வைத்து டிஸ்மிஸ்! இதுவும் நாயுடு சங்கப் பிரதிநிதியும், மானேஜரும் கூடி சதியாலோசனை செய்து செய்த வேலையே!

26–2–44 ந் தேதியன்று மாரியப்பன், மாரியப்பன் செட்டியார் என்ற மற்ற இரு தோழர்களும் டிஸ்மிஸ்!

ஸ்ரீ நாயுடுவின் கேஸை சேர்மா தேவி கோர்ட்டே விசாரிக்கவேண்டுமென்ற ஹைகோர்ட் நீதிபதி தீர்ப்புக் கூறியதினால், விக்ரமசிங்கபுரம் தொழிலாளிகளிடையே பெருத்த உற்சாகம் ஏற்பட்டுவிடுமே என்று நினைத்து அதைஅடக்குவதற்குத்தான் மானேஜ்மெண்ட் இம்மாதிரி 'டிஸ்மிஸ் சூழ்ச்சி'களைக் கையாளுகின்றதாகத் தெரிகின்றது.

### சளைக்கவில்லை

ஆனால் இவ்வித பல தொல்லைகளுக் கிடையிலும் தொழிலாளிகள் உற்பத்திப் பெருக்கென்ற தங்கள் தேசபக்திப் பணியில் சளைக்காமல் முன்னேறி வருகின்றனர்.

சென்ற நவம்பர் மாதத்தில் உற்பத்தி வாரக் கொண்டாட்டத்தின் போதிருந்து, தொழிலாளிகள் தங்கள் உற்பத்திப் பெருக்கின் அளவைத் தெரிந்துகொள்ள இண்டிகேடர் கருவியிலிருந்து புள்ளிகளைக் குறித்து வந்தனர். இதனால் வேலைக்கு எவ்வித இடையூறும் கிடையாது. ஆயினும் உற்பத்திப் புள்ளிகள் குறித்த காரணத்திற்காக மில் மானேஜ்மெண்ட் 2 தொழிலாளிகளை டிஸ்மிஸ் செய்தது. உடனே சங்கம் "டிஸ்மிஸ் செய்தது தவறென்றும், தொழிலாளிகளின் உற்பத்தி பெருக்கு ஊக்கத்தை இது குறைக்குமென்றும், இதில் சர்க்கார் தலையிடவேண்டு"மென்றும் லேபர் கமிஷனருக்கு எழுதியதற்கு, அவர் மானேஜ்மெண்டின் செய்கைக்கு 'ததாஸ்து' போட்டு தொழிலாளிகளின் மீது குற்றஞ் சாட்டி பதிலனுப்பிவிட்டார்.

### உண்மை தேசபக்தர்கள்

தேசபக்தர்களையும், தொழிற்சங்கவாதிகளையும், சிறையிடுவதற்கு "யுத்த முயற்சி" என்ற போலி கோஷத்தைக் கிளப்பும் முதலாளிகளுக்கு, உண்மையில் உற்பத்தியைப் பெருக்கி யுத்த முயற்சிக்கு ஆதரவளித்து முதலாளிகளின் போலிப் போர்வையைக் கிழித்தெறியும் தொழிலாளிகளின்மேல் ஆத்திரம் வருவதைப் பாருங்கள்!

ஆனால் இந்தவஞ்சக வாதிகளின் சாயம் மேலும் மேலும் வெளுத்து வருகிறது. தொழிலாளிகள் தங்களுடைய உண்மையான உற்பத்திப் பெருக்கின் மூலம் தாங்கள்தான் பொதுஜனங்களின் பாதுகாப்பாளர்கள் தேசத்தைப் பாதுகாப்போர் என்பதை நிரூபித்து வருகின்றனர். இவர்களின் தேசபக்தி வெள்ளத்தின் முன்னே முதலாளிகளின்-அதிகாரவர்க்கத்தின் முட்டுக் கட்டைகள் எம்மாத்திரம்!

---

# வளர்ந்துவரும் பிரிட்டிஷ் பொதுஜன சக்தி

## பார்லிமெண்ட் தேர்தலில் கம்யூனிஸ்டுகள்

*[பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளுக்கு எதிராக பிரிட்டிஷ் பொதுமக்களுடைய கிளர்ச்சியைப்பற்றி உங்களுக்குத் தெரியும். இந்தியாவின் சுதந்திரக் கோரிக்கைக்கு ஆதரவாக பிரிட்டிஷ் பொதுமக்களிடத்தில் கம்யூனிஸ்ட் கட்சி கிளர்ச்சி செய்து வருவதும் நீங்கள் அறிந்ததே. அவர்களுடைய சக்தி பெருகப் பெருக நம்முடைய கோரிக்கைக்கு பலம் அதிகம்.*

*பிரிட்டிஷ் பார்லிமெண்ட் பொதுத் தேர்தல் வருகிறது. அதில் பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சி என்ன செய்கிறது?]*

பிரிட்டிஷ் பார்லிமெண்டில் இப்பொழுது ஒரேஒரு கம்யூனிஸ்டுதான் இருக்கிறார். அவருடைய பெயர் தோழர் வில்லியம் கலாக்கர். (இவர் பேசுவதெல்லாம் ராய்ட்டர் செய்தியில் வெளிவராது!)

இப்பொழுது வருகிற பொதுத் தேர்தலில், ஐம்பத்திரண்டு அபேட்சகர்களை நிறுத்துவதென பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சியின் நிர்வாகக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது.

இதைப்பற்றி வெளியிட்ட ஒரு அறிக்கையில், "அடுத்த பொதுத் தேர்தலில் தொழிலாளர்களும், முற்போக்கானஸ்தாபனங்களும் வெற்றி பெற்று, பார்லிமெண்டில் அவர்களுக்கு மெஜாரிட்டி இருப்பதற்கு, அந்த ஸ்தாபனங்களெல்லாம் ஒன்றாக சேர்ந்து வேலை செய்யவேண்டும் என்று கம்யூனிஸ்ட் கட்சியின் நிர்வாகக் கமிட்டி நம்புகிறது. இதனால் சமூகநீதியையுடைய கொள்கைக்கு உத்தரவாதமேற்படுவதுடன், ஜனங்களின் முன்னேற்றத்திற்கு சேவை செய்ய முடியும்" என்று கம்யூனிஸ்ட் கட்சி கூறுகிறது.

தொழிலாள வர்க்கத்தில் எந்த விதமான பிளவும் ஏற்படாமல், தொழிலாள வர்க்கத்தை பலப்படுத்துவதற்காக, பிரிட்டிஷ் லேபர் பார்ட்டி, மற்ற தொழிற் ஸ்தாபனங்களையும், முற்போக்கான ஸ்தாபனங்களையும் ஒன்றுகூட்ட வேண்டும் என்று அந்த அறிக்கை கூறுகிறது. (லேபர் பார்ட்டியுடன் கம்யூனிஸ்ட் கட்சி ஐக்கியமாவதை, லேபர் பார்ட்டி பிற்போக்குத் தலைமை (மாரிஸன் அண்ட் கோ) எதிர்த்து வருவதை ஞாபகப்படுத்துகிறோம். ஆ-ர்.)

"டெயிலி ஒர்க்கர்" கம்யூனிஸ்ட் கட்சியின் தினசரி பத்திரிகை. வில்லியம் ரஸ்ட், புரோபஸர் J. B. S. ஹால்டேன், கீர்த்திபெற்ற விஞ்ஞானி டாக்டர் ஹ்யூலெட் ஜான்ஸன், காண்டர்பரி மாதா கோவிலின் பிரதம பாதிரி, ஆகிய பேரறிஞர்கள், அந்தப் பத்திரிகையின் ஆசிரியர் கமிட்டியில் இருக்கிறார்கள். அவர்களெல்லோரும் சேர்ந்து, ஜனங்களுக்கு முன் எழுந்துள்ள பிரச்சினைகளை விவாதிப்பதற்காக, ஒரு மகாநாட்டைக் கூட்டுகிறார்கள். ஏப்ரல் மாதம் இரண்டாம் தேதி மகாநாடு நடக்கும். எல்லா முற்போக்கு ஸ்தாபனங்களுக்கும் அழைப்புகள் அனுப்பப்பட்டிருக்கின்றன.

பிரிட்டிஷ் பொதுமக்களின் சக்தி எவ்வளவு தூரம் வளர்ந்திருக்கிறது என்பதை இது நிரூபிக்கும்.

---

# குறைந்தகூலியும் உற்பத்தித்தடையும் ஒழிய

## சுருட்டுத் தொழிலாளர் கிளர்ச்சி

திருச்சி

இப்பொழுது புதிதாக மறுபடியும் புகையிலை வரி உயர்த்தப்பட்டிருக்கின்றது. இதற்குப் பின் கலால் அதிகாரிகள் (Excise Officers) புகையிலை கிடங்குகளில் நடந்துகொள்ளும் முறை தொழிலாளிகளை மிகவும் பாதிக்கின்றது.

உதாரணமாக அந்த அதிகாரிகள் ஒவ்வொரு நாள் காலையிலும் தாங்களே கிடங்குகளுக்கு வந்து புகையிலையை நிறுத்து தொழிலாளிகளுக்குக் கொடுக்கின்றார்கள். இவர்கள் வந்து நிறுத்துக் கொடுப்பதற்குள் மணி 12 ஆய்விடுகின்றது. அதற்கு மேல் தொழிலாளிகள் அந்தப் புகையிலையைக் கிழித்து, சுருட்டு செய்ய வேண்டும். மாலை 5-மணிக்கெல்லாம் மறுப்படியும் கலால் அதிகாரிகள் வந்துவிடுகின்றனர். தொழிலாளிகளின் வேலையும் அத்துடன் தான். பின்னர், அந்த அதிகாரிகளிடம் போய், போட்ட சுருட்டுகள், பாக்கி இருக்கும் புகையிலை இவைகளுக்குக் கணக்குக் கொடுத்துவிட்டு வெளியேற வேண்டியது.

சாதாரணமாக காலை 8-30 முதல் மாலை 7-மணி வரை வேலைசெய்தால் தான் ஒரு சுருட்டுத் தொழிலாளிக்கு நாளொன்றுக்கு 9 அணா, 10 அணா கிடைக்கும். இன்றுள்ள நிலைமையில் கூலியும் குறைகின்றது. சுருட்டு உற்பத்தியும் தடைப்படுகின்றது.

ஆதலால் இந்த விஷயங்களையெல்லாம் பொது ஜனங்களுக்கு விளக்கி எடுத்துச் சொல்ல, சென்ற 6–3–44-ந் தேதியன்று உறையூர் நாச்சியார் கோவில் மைதானத்தில் திருச்சி சுருட்டு தொழிலாளர் சங்கத்தின் சார்பில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெற்றது. சுருட்டுத் தொழிலாளத் தோழர் கருப்பண்ணன் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். தோழர்கள் A. S. கிருஷ்ணமூர்த்தி, C. S. ஞானம், இப்ராகீம், K. A. சாரி முதலியவர்கள் பேசினர். கூட்டத்திற்கு சுமார் 600 பேர் வந்திருந்தனர். முடிவில் பின்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

(3-பக்கம் பார்க்க)

[கே. பாலதண்டாயுதம்

# சுதந்திர மாஜனப் போர்!

## அனைவரும் அணிவகுப்பீர்!

சில வாரங்களுக்கு முன் இந்தியாவின் மீது ஜப்பானியர் பெரிய தாக்குதல் நடத்தினர்கள். இந்தியத் துருப்புகளைச் சுற்றி வளைத்துக்கொண்டு முன்னேறுவது இத்தாக்குதலின் நோக்கம். அரக்கான் முனையிலிருந்த 5வது 7வது படைகளுக்கு இதனால் பெரிய ஆபத்து ஏற்பட்டது. 7000 ஜப்பானிய சிப்பாய்கள் இந்தியப்படை வரிசைகளை ஊடுருவிக் கொண்டு வந்துவிட்டனர். ஆனால் இத்தாக்குதல் முறியடிக்கப்பட்டது. இச்செய்தியை சர்க்கார் அறிக்கையிலிருந்தே தெரியவருகிறோம்.

ஆகவே நம் நாட்டிற்கு படையெடுப்பு ஆபத்து இன்னும் நீங்கவில்லை; மயிரிழையில் படையெடுப்பு தடுத்து நிறுத்தப்பட்டது என்பதையே இந்தச் செய்தி நமக்கு உணர்த்துகிறது.

### ஆபத்து நீங்கவில்லை

அதைத் தொடர்ந்தாற்போல் இன்று நமக்கு ஒரு செய்தி வருகிறது. தென் இந்தியாவின் கரையோரத்தில் ஜப்பானியர் ஒரு நேசக் கப்பலை மூழ்கடித்துவிட்டனர்; அதில் தப்பிய மாலுமிகள் 115 பேர். அவர்கள் கரை சேர்த்தப்பட்டனர்.

"படையெடுப்பு ஆபத்து இனி இல்லை. கவலை தீர்ந்தது" என்று திருப்தி யடைபவர்களுக்கு கன்னத்தில் அறைவதுபோல் கிடைத்த செய்தி. "அரக்கான் முனையில் மட்டும் ஜப்பானியர்கள் ஊருராயிருக்கிறார்கள். தரைமூலம்தான் ஆபத்து. கடலில் அவ்வளவு இல்லை" என்று நினைப்பதுவும் தவறு. "கடலிலும் ஜப்பானியர் மும்முரமாக விருக்கின்றனர். தென் இந்தியாவிற்கும் எந்நேரத்திலும் பேராபத்து வரலாம்; உஷார்" என்கிறது இச்செய்தி.

இன்னும் சந்தேகமிருந்தால் ஒரு அமெரிக்க ராணுவ நிபுணர் என்ன சொல்லுகின்றார் என்று கேட்போம் :—

"இலங்கைத் தீவையும், தென்னிந்தியாவின் கிழக்குக் கரையையும் ஜப்பானியர் திடீரெனத் தாக்கலாம்; அதில் ஆபத்து அதிகம். ஆனால் கப்பற்படை துறைமுகத்தில் இருக்கும் சமயத்தில்—ட்ரக் துறைமுகத்தில் நேர்ந்ததுபோல — படை மூழுதமே அழிவதைக் காட்டிலும், ஒரு தாக்குதல் நிகழ்த்தி அதில் சில படை யூனிட்டுகள் நாசமாவதுமேல் என்றுபுண்பட்ட அட்மிரல் ஷிமாடாவின் உள்ளம் அவருக்குச் சொல்லக்கூடும்."

இங்ஙனம் நியூயார்க் ட்ரிப்யூன் என்ற அமெரிக்கப் பத்திரிகையில் மிஸ்டர் ஜார்ஜ் பீல்டிங் எலியட் எழுதுகிறார். நமக்குக் கிடைத்த இந்த இரு செய்திகளும், இந்த நிபுணரின் நிதானிப்பும் நம் கண்களைத் திறக்கவேண்டும். உறங்கும் தேச மக்களைத் தட்டி யெழுப்ப வேண்டும்.

### அரக்கான் தவக்கம்

இந்த அபாயத்தைப் போக்க ஒரே வழி. பர்மாவிற்குள் எதிர்த்தாக்குதல் நடத்துவதே; ஆனால் அரக்கான் முனையில் சென்ற வாரத்திலும் நேசப் படைகள் முன்னேறக் காணோம்; அதற்கு அறிகுறிகளும் தென்படவில்லை. இதாலி முனையில் நேசப்படைகள் தற்காப்பு யுத்தத்திலேயே இருக்கின்றன அல்லவா? பல மாதங்களுக்குப் பின்னரும் இருந்த இடத்திலேயே இருக்கின்றனவல்லவா! அதே காட்சியைத்தான் அரக்கான் முனையிலும் காண்கின்றோம்.

ஆனால் செஞ் சேனை சூறாவளி போல் நாஜிகளை நிர்மூலம் செய்துகொண்டு முன்னேறுகிறது. சோவியத்தின் தெற்குப் பகுதியில் நாஜிகள் பிரம்மாண்டமான கஷ்டத்திற்கு உள்ளாகி யிருக்கின்றனர். ஜெனரல் சுகாவ் ஆரம்பித்த தாக்குதலில் 7 தினங்களில், 1 லட்சம் நாஜிகளை அவர்களுக்கு உரித்தான இடத்திற்கு—பரலோகத்திற்கு—அனுப்பி வைத்தனர். நான்கு யூக்ரேனிய முனைகளிலும் செஞ் சேனை முன்னேறி வருகிறது வடக்கே டார்னோபோலிலிருந்து தெற்கே கருங்கடல் துறைமுகமான நிகோலயேவ் வரையிலும்...400 மைல் முனையில்—நாஜிகள் தலைதெறிக்க ஓடுகின்றனர். ஓடெஸ்ஸா—லோவாவ் ரயில் பாதை டார்னோபோலுக்கும், பிராஸ்குராவிற்கும் இடையில் துண்டிக்கப்பட்டிருக்கிறது. டார்னோபோலில் தெருச் சண்டை. இந்தப் பகுதியில் இன்னும் மூன்று பெரிய கிடுக்குகள் நீண்டு வருகின்றன; இப்பெரிய கிடுக்கிகளில் சிக்கும் தருவாயில் நாஜிகள் தவிக்கின்றனர். இத்துடன் தென் ரஷ்யப் பகுதியில் நாஜிகளின் கதை முடிவாகிறது. பால்கன் நாடுகளில் மக்களின் சுதந்திர எழுச்சி—ஹிட்லர் எதிர்ப்புப் புரட்சி—அத்தியாயம் ஆரம்பமாகிறது.

வடக்குப் பகுதியிலும் வெள்ளை ரஷ்யாவிலும் பிஸ்காவிற்கும் வைடப்ஸ்கிற்கும் போர் உக்ரமாக நடக்கிறது. அவை பிடிபட்டால் பால்டிக் நாடுகளின் விடுதலையும் நெருங்கும். அந்நாடுகளுக்கு சுதந்திர சூரியன் கிழக்கிலே உதிக்கும் தருவாயில், அம்மக்கள் வெளிச்சத்தை ஆவலுடன் எதிர்நோக்கி நிற்கின்றனர்.

ஹிட்லர் கூட்டத்தில் அல்லோல கல்லோலம்; பின்லாந்து சமாதானப் பேச்சுத் தொடங்கிற்று. பல்கேரியா ஹிட்லருடனிருந்து பிரிந்து போக பிரயத்தனம் செய்து வருகிறது.

இத்தனைக்கும் சோவியத் முனையில் சீதோஷ்ண ஸ்திதி இன்று யுத்தத்திற்கு வெகு பிரதிகூலமானது. முழங்கால்வரை சேற்றில் டாங்கிகளும், லாரிகளும், ஆட்களும் துணிந்து முன்னேறுகின்றனர்.

### மக்கள் ஆதரவு

இவ்வெற்றிகளுக்கு முக்ய காரணத்தைத் தெரிந்துகொள்ள அரசியல் துறையில் பார்க்கவேண்டும். சோவியத் சர்க்காரும், அதன் செஞ் சேனையும் மக்கள்மீது முழுநம்பிக்கை வைத்து, அவர்கள் ஆதரவை குறைவின்றிப் பெற்று, முன்னேறுகின்றன. சோவியத் நாட்டில் ஜனங்களின் ஒற்றுமையைக் கண்டு உலகம் வியக்கிறது; அதில் சேர்ந்த 16 தேசிய இனங்களுக்கும் பரிபூர்ண சுயநிர்ணய உரிமையை வழங்கப்பட்டிருக்கிறது. மற்ற நாட்டு மக்களுக்கும் சோவியத்தின் மீது அபார நம்பிக்கை பிறந்திருக்கிறது. உதாரணமாகத் துருக்கிப் பத்திரிகை அக்ஸம் கீழ்கண்டவாறு எழுதுகிறது :—

"தன்னையும், நேசநாடுகளையும் காப்பதற்குப் போராடும் ரஷ்யா, பெரும் சேதத்தை அடைந்துகொண்டு போர்புரியும் ரஷ்யா, ஐரோப்பாவின் சமாதானகால நிர்மாணத்தைப்பற்றிய தன் கொள்கையைத் திட்டவட்டமாக சொல்லிவிட்டது. ஆனால் அதனுடன் சேர்ந்துள்ள நேசநாடுகள் சமாதானகால நிர்மாணத்தைப்பற்றிச் சொல்வதெல்லாம் பொதுப்படையாக விருக்கின்றன; அதில் ஒன்றும் தெளிவாகத் தெரியவில்லை. "சர்வதேசக் கூட்டுறவு", "நீடிக்கும் சமாதானம்", 'நியாயத்திற்கும், சுதந்திரத்திற்கும், சிறுநாடுகளுக்கு உரிமை" என்ற பசப்பு வார்த்தைகளைக் கூறுகின்றனர். அதனால் தங்கள் நாட்டு மக்களிடத்திலும், இதரநாட்டு மக்களிடத்திலும் தங்களுடைய சமாதானகாலத் திட்டத்தில் நம்பிக்கை ஊட்ட முடியவில்லை".

செக்கோஸ்லோவேகியாவின் தலைவர் டாக்டர் பெனஷ் சோவியத்துடன் பரஸ்பர ஒத்துழைப்பு உடன்படிக்கைசெய்துகொண்ட காலத்தில் கூறியதாவது :

"மனித் தன்மையற்ற கொள்ளைக் கூட்டமான ஜெர்மன் நாட்டாசைக்காரர்களை—போலந்து, யூகோஸ்லாவியா, செக்கோஸ்லோவியா, சோவியத் யூனியன் ஆகிய ஸ்லாவ் நாடுகளை அழிப்பதற்கு முயற்சித்த நாஜிக் கூட்டத்தை—எதிர்த்து நடக்கும் இந்த யுத்தத்தில் இந்த ஒப்பந்தம் இயற்கையாக எழும் ஒரு கட்டம். வருங்கால ஐரோப்பாவிற்கு இந்த ஒப்பந்தம் ஒரு அஸ்திவாரக் கல். இது நமக்கும், நம்முடன் சேர்ந்த எல்லா நேசநாடுகளுக்கும் நன்மை பயக்கக்கூடியது. ஐரோப்பாவில் சமாதானத்தை நிலைநாட்டுவதற்கு உதவும்."

இதுபோலவே பிரான்ஸ், இதாலி, ஆஸ்திரியா, யூகோஸ்லேவியா, கிரீஸ், பல்கேரியா முதலிய நாடுகள் சோவியத்தின்மீது அசையாத நம்பிக்கையுள்ளவர்களாய், அதன் உதவி கொண்டு சுதந்திர ஐரோப்பாவை ஸ்தாபிக்க முன்னேறுகின்றனர்.

இது செஞ்சேனையின் அரசியல் சக்தி.

### பிற்போக்கு

இதற்கு மாறாக இதாலி, அரக்கான் முனையில் காணும் மந்தத்திற்கு உள்ள அரசியல் பலஹீனமென்ன! பிற்போக்கு முதலாளிகளின் சண்டித்தனத்தால் யுத்தத்திற்கு இன்றியமையாத பிரிட்டிஷ் நிலக்கரி சுரங்கத்தில் வேலைநிறுத்தம். ஆஸ்திரேலியாவிலும் நிலக்கரி சுரங்கத் தொழிலாளிகள் வேலைநிறுத்தம். இதாலிய மன்னனை சர்ச்சில் ஆதரிப்பதால்இதாலியுள்ள தொழிலாளருக்கும் அதிருப்தி. மிலானில் தொழிலாளர் தங்கள் கண்டனத்தைத் தெரிவிக்க வேலைநிறுத்தம் செய்வதாக முடிவு செய்தனர். இதாலிய சுதந்திரக் கமிட்டி தலையிட்டு, யுத்தமுயற்சிக்கு அதனால் ஏற்படும் பாதகத்தை விளக்கவே, தொழிலாளர் வேலைக்குச் சென்றனர். இந்தியாவில் தலைவர்கள் சிறையில்; அரசியல் பொருளாதார நெருக்கடி;சமூகசீர்குலைவு. பர்மாவின்வருங்காலத்தைப்பற்றி அமெரி திட்டமாக எதையும் சொல்ல மறுத்தார் என்பதை நாமறிவோம். இவ்வாரத்தில் சர். ஜேம்ஸ் கீரிக், பிரிட்டிஷ் மந்திரி பர்மாவைப்பற்றிக் கூறியதை கீழே தருகிறோம் :—

"பர்மாவைத் திரும்பிப் பிடிக்கும்போது ஆரம்ப கால நிர்வாகத்திற்கு திட்டங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. கிழக்கிலிருக்கும் இதர காலனிகளுக்கும் நிர்வாகத்திட்டம் வகுக்கப்படுகிறது."

இந்த அறிக்கை பாஸிஸ—எதிர்ப்பு யுத்தத்தில் பங்கு கொள்ள முந்துவதற்கு பர்மிய மக்களுக்கு ஊக்கமளிக்காது.

இத்தகைய பிற்போக்குச் செய்கைகளினால் அரக்கான் முனையிலும், இதாலி முனையிலும் போர் என்றும் தேங்கித்தான் கிடக்க வேண்டுமா! யுத்தம் நீடித்துக்கொண்டு போக வேண்டுமா! அதன் கோரங்களை அனுபவித்துக் கொண்டே இருக்க வேண்டுமா!

இல்லை!

### முக்கிய படிப்பினை

செஞ் சேனை நமக்கு அளிக்கும் முக்ய படிப்பினை அது அல்ல. மக்கள் முன்னேறினால் இப்பிற்போக்கு பறந்து ஒழியும்; யுத்தத்தை சடுதியில் முடிக்க சோவியத் இரண்டாம் போர்முனைக் கோரிக்கையை முன்வைத்தது. நேசநாட்டு முகாமிலுள்ள பிற்போக்காளர்கள் அது ஏற்படுவதற்கு தடங்கலாக நின்றார்கள். அதனால் செஞ்சேனை "நமக்கு என்ன வந்தது" என்று உட்கார்ந்துவிடவில்லை; தனிமையாக நின்றபோதிலும் வீரமாக ஸ்டாலின்கிராடு, லெனின்கிராடு, ஓடெஸ்ஸா, நீபர் நதி யுத்தங்களை நடத்திற்று; இங்ஙனம் முன்னேறியதால்தான் இன்று பிரிட்டிஷ் மந்திரி மாரிஸன், கீழ் காணும் மொழிகளில் சர்க்காரின் கருத்தை சொல்லும் நிர்பந்தம் ஏற்பட்டது :—

"ஐரோப்பாவில் நாங்கள் இறங்குவோம் : ஜெர்மனியின் குறவளையை பிடிப்போம், அதன் உயிரை எடுப்போம்."

ஆம்! இது மாரிஸன் பேசுவதல்ல. செஞ் சேனையின் வெற்றிகள் பேசுவது!

### வழியுண்டு

இன்னும் சில உதாரணங்கள். நாஜிப் புலையர்களின் மிருகத்தனமான செய்கைகளுக்கு கார்காவில் ஒரு விசாரணை நடந்தது; அவ்வழியில் இன்று சுதந்திர பிரஞ்சுக் கமிட்டி பேரிபூஷோ என்ற விச்சி மாஜி மந்திரியை விசாரித்துத் தூக்குத்தண்டனை கொடுத்திருக்கிறது. ஆதியில் இந்தக்கூட்டத்தைச் சேர்ந்திருந்தஜெனரல் கிராட் இன்று இம்மாஜி மந்திரியை எதிர்த்து சாட்சியம் கொடுத்தார். அவருடைய இம்மாறுதலுக்குக் காரணம் பிரான்ஸில் நடந்துவரும் பிரஞ்சு சுதந்திர இயக்கம்; ஐரோப்பிய மக்களின் எழுச்சி;செஞ் சேனையின் வீர முரசு; கிராடு பணிந்தார்; பூஷோவிற்கு தூக்கு, வேறு எந்த தண்டனை கொடுத்திருந்தாலும், பிரஞ்சு சுதந்திர இயக்கத்திற்கு பெரும் அதிருப்தி ஏற்பட்டிருக்கும் என்று பத்திரிகை நிருபர்கள் கூறுகின்றனர். ஏனெனில் பிரெஞ்சுமண்ணில் வளர்ந்துவரும் மறைமுகமான மக்களின் சுதந்திர இயக்கம், பூஷோவிற்கு தூக்குதண்டனை ஏற்கனவே விதித்திருக்கிறது. இதிலிருந்தே இவ்விசாரணைக்கும், தண்டனைக்கும், கிராடின் மாற்றத்திற்கும் நிர்ப்பந்தம் பிரஞ்சு மக்கள்—ஹிட்லரை எதிர்த்து போராடிவரும் பிரஞ்சு மக்களிடமிருந்தே—வந்தது என்பது வெட்டவெளிச்சம்.

நேசநாடுகள் சுதந்திர பிரஞ்சுக் கமிட்டிக்கு பிரெஞ்சு, கப்பல்களை ஒப்படைத்துவிட்டனர். ஹிட்லரை எதிர்த்துப்போரை தீவிரப்படுத்தும் சுதந்திர பிரஞ்சுக் கமிட்டியின் நிர்ப்பந்தமே, பிரான்ஸிற்கு இனி வருங்காலம் கிடையாது என்று கூறிய ஜெனரல் ஸ்மட்ஸின் பிற்போக்கை ஒழித்து வருகிறது. கப்பல்களைப் பெற்றனர். பிரிட்டனுக்குப் போயிருக்கும் அமெரிக்கப் பிரதிநிதி ஸ்டெட்டனஸ் அக்கமிட்டியின் அங்கீகாரத்தைப் பற்றி பேச்சுவார்த்தை நடத்தப்போகிறார்; இனி அதைத் தள்ளிப்போட முடியாது.

### பிற்போக்குந் தோல்வி

இதே மாதிரித்தான்— ஹிட்லரை எதிர்த்து ஜன யுத்தத்தில் பெரும் பங்கெடுத்த யூகோஸ்லேவியாவின் தலைவர் டைட்டோவை தளபதியாக அங்கீகரிக்க நேர்ந்தது. ஜப்பானியரை 6 வருஷத்திற்கு மேல் திணரவைக்கும் சீனாவை, தங்களுக்கு சம அந்தஸ்துள்ள சுதந்திர நேச நாடாக ஒப்புக்கொள்ளாமல் முடியவில்லை. பிற்போக்காளர்கள் யூகோஸ்லாவியாவில் மிஹலோவிச்சை ஆதரித்தனர். தொடர்ந்தும் ஆதரிக்க விரும்பினர். சீனாவையும் தொடர்ந்து சுரண்டிவருவதே பிற்போக்காளரின் திட்டம்; ஆசையும் கூட. ஆனால் ஜனயுத்தத்தில் அந்நாட்டுமக்கள் பங்குகொண்டு பலம்பெற்றனர். அவர்கள் முன் பிற்போக்காளர்கள் நிற்க முடியவில்லை.

### இதாலியும் இவ்வழியில்

இதுதான் இதாலியின் தேக்கத்தையும் அரக்கான் தேக்கத்தையும் ஒழித்து முன்னேற முடியும் என்ற நம்பிக்கையை ஊட்டுகிறது. அப்படிச் செய்வது நம் கையிலிருக்கிறது. பிற்போக்காளர்கள் யுத்தத்தை நீடிக்கவோ, பாஸிஸ்ட்டுகள் நாடுகளை ஆக்ரமித்து அழிக்கவோ நாம் அனுமதிக்க முடியாது.

இதாலியில் சர்வ கட்சிகளும் ஒன்றுபட்டு சுதந்திரக் கமிட்டி அமைத்து ஹிட்லரை எதிர்த்து சுதந்திரப் போரை முனைந்து நடத்துகின்றன. அதை ஆதரித்து இதாலிய மக்கள் முன்னேறுகின்றனர்.

இந்தியாவில்! இங்கும் சர்வ கட்சிகளும், சகலமக்களும் ஜப்பானிய எதிர்ப்பை முனைந்து நடத்துவதன் மூலம் பெறும் பலமே, பிரிட்டிஷ் பிற்போக்காளர்கள் இந்திய மக்களின் சுதந்திரத்தை மறுக்கமுடியாமல் செய்யும். இந்தியாவிற்கு விஜயம் செய்துள்ள சீனத்தலைவர் மிஸ்டர் எஸ் சி, லியுங்கும் அதைத்தான் சொல்லுகிறார் :—

"இந்தியப் பிரச்னையில் அக்கரை கொண்ட எல்லா சீனர்களும் இந்தியாவில் தேசீய ஒற்றுமை வெகுவெகு அவசியம் என்று எண்ணுகின்றனர் ஏனெனில் தேசிய ஒற்றுமையின் மூலம் தான் சீன இவ்வளவு காலம் ஜப்பானிய ஆக்ரமிப்பை எதிர்த்துப் போராட முடிந்தது."

### சுதந்திரப் பாதை

இந்தியாவின் மீது படையெடுப்பு ஆபத்து இன்னும் நீங்கவில்லை என்பதை முதலில் பார்த்தோம். அரக்கான் முனையில் தவக்கத்திற்குக் காரணத்தையும் கண்டோம். தவக்கம் தீர்த்து முன்னேறுவது நம் கையிலிருக்கிறது என உணர்ந்தோம்; அப்படியிருக்கையில் சீனத்தலைவர் வற்புறுத்திக்கூறும்தேசியஒற்றுமையை மீண்டும்வற்புறுத்தவேண்டியதில்லை. இது அனைவருள்ளத்திலும் பசுமரத்தாணிபோல் பதியவேண்டும்.

நடுநிலைமை வகிக்கும் துருக்கிக்கும், அயர்லாந்திற்கும் சரியான வழி பாஸிஸ்ட்-எதிர்ப்பு யுத்தத்தில் இறங்குவது. துருக்கி மக்களும், அயர்லாந்து மக்களும் தங்கள் தங்கள் சர்க்காரை நிர்பந்தித்து சுதந்திரத்திற்கு நடக்கும் ஜன யுத்தத்தில் அணிவகுப்பாராக!




'கிழக்குமுனையில் நம் படைகள் அணியை சுருக்கிக்கொண்டிருக்கின்றன'
பேர்லின் ரேடியோ

## கோலார் தேர்தல்

மைசூர் மைன்ஸ் தொழிலாளர் சங்கத்திற்கு (Mysore Mines Labour Association) 1944-ம் வருடத்திய நிர்வாகஸ்தர்கள் தேர்தல் 11-3-43 ல் நடந்தது. மைசூர் அரசாங்க உதவி லேபர் கமிஷனர் தேர்தலை நடத்தினர். எல்லாப் பதவிகளுக்கும் கம்யூனிஸ்ட்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தோழர் V. M. கோவிந்தனை, 3000 தொழிலாளர்கள் காகோஷம் செய்து தோளில் சுமந்து சீங்கக் கட்டிடத்திற்குத் தூக்கிச் சென்றனர்.

ஓட்டுகள் எண்ணிக்கையை கீழே பார்க்கவும் :—

| பதவி. | அபேட்சகர். | ஓட்டுகள். |
|---|---|---|
| தலைவர் : | V. M. கோவிந்தன் (கம்யூனிஸ்டு) | 1270 |
| | P. R. K. சர்மா | 153 |
| உபதலைவர் : | M. A. முத்துசாமி (கம்யூனிஸ்ட்) | 1070 |
| | R. கோவிந்தசாமி | 352 |
| உதவி காரியதரிசி : | R. கம்பிரம் (கம்யூனிஸ்ட்) | 965 |
| | இப்ராஹிம்கான் | 452 |
| பொக்கிஷதார் : | N. முனிசாமி (கம்யூனிஸ்ட்) | 1088 |
| | K. K. இசாக் | 328 |

# ★ சீன தேசீயப் புரட்சி வீரர் ★

## ★ டாக்டர் சன்-யாட்-சென் ★

உறங்கிக்கிடந்த சீனாவிற்கு ஊக்கமளித்தவர் டாக்டர் சன் யாட்சென். இன்று சீனாவிலுள்ள பெரிய ஸ்தாபனமாகிய கோமின்டாங்கின் பிதா அவர். சீன தேசீயத்திற்கே உயிர் நாடியாக இருக்கிற—ஜனநாயக கோஷங்களை கொடுத்தவர் அவர். என்றும் அழியா அவருடைய கொள்கைகள் இன்னும் சீன மக்களுக்கு ஊக்கத்தையும் உற்சாகத்தையும் அளித்துக்கொண்டிருக்கின்றன,

டாக்டர் சன்யாட்சென் 1925-ம் வருடம் மார்ச்சு மாதம் 12-ம் தேதி உயிர் துறந்தார். அவர் 1866-ல் பிறந்தார். பிறநாடுகளுக்குச்சென்று கல்வி கற்று டாக்டர் தொழில் ஆரம்பித்தார். 1895-ல் முதல் முதலாக சீனக்குடியரசு ஸ்தாபனத்தை ஆரம்பித்தார். அன்றிருந்த அரசாங்கத்தின் வலையில் சிக்கிக் கொள்ளாதிருக்க நாடு துறந்து அயல் நாடு சென்றும் மறுபடியும் 1905ல்இன்று அதிகாரத்திலிருக்கும்'கோமிண்டாங்' என்ற ஸ்தாபனத்தை ஆரம்பித்தார். 1911ல் மஞ்சு அரசர்களுக்கு எதிராக நடந்த பெரும் புரட்சியில் தலைமை வகித்தார். மறுபடியும் 1917 ரஷ்யாவில் ஏற்பட்ட புரட்சி அலை சீனாவிலும் வீசியது. பெரும் கிளர்ச்சி. 21ல் சீனக் குடியரசிற்கு சென் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ரஷ்ய சோஷலிஸப் புரட்சி டாக்டருக்கு புதிய ஆர்வத்தைக் கொடுத்தது. ஆரம்பத்திலிருந்த இளம் சோவியத்தை மிக்க ஆர்வத்துடன் வரவேற்றார். "நான் மக்கள் சுக வாழ்வைப்பற்றிக் கூறுவது வாஸ்தவத்தில் கம்யூனிஸத்தைத் தவிர வேறில்லை" என்று அவர் கூறினார். சோவியத் திட்டத்தில் அபார ஆதரவும், நேசப்பான்மையும் அவருக்குண்டு "சீனாவின் விடுதலையைக் கோரும் நாடு சோவியத் ரஷ்யா ஒன்றுதான்" என்று அவர் அபிப்பிராயப்பட்டார். சென் சோவியத் பிரதிநிதிகளைக் கலந்து ஆலோசித்து காரியங்கள் செய்வதில் என்றும் பிரியப்படுவார்.

சீனக்கம்யூனிஸ்டுஇயக்கம்ஆரம்ப நிலையில் இருந்தபோது அவர்களுக்கு மிக்க ஆதரவு கொடுத்ததோடல்லாமல் கம்யூனிஸ்டுகளும் கோமிண்டாங்கும் ஒன்றுபட்டால்தான் சீனாவிற்கு கதிமோக்ஷமுண்டு என்று அவர் திடமாக நம்பினார். ஆதலால் அத்தேசிய ஒற்றுமைக்காகப் பாடுபட்டார். இந்தநோக்கத்துடன் 1924ல்கோமிண்டாங்கைத்திருத்தி அமைக்கும்போது அதில் கம்யூனிஸ்டுகளையும் சேர்த்துக் கொண்டார்.

ஏகாதிபத்தியம், பிரபுத்வ பிற்போக்கு,இவற்றை எதிர்த்து, தேசிய விடுதலைக்காக நடத்தும் போரில் கம்யூனிஸ்டுகளை தன் பக்க பலமாக வைத்துக்கொண்டார் சென்.

அன்றியும் சீனாவின் விடுதலையில் அக்கரையுள்ள ஒரே நாடாகிய சோவியத் யூனியனுடன் உறவு என்றும் நீடிக்க வேண்டுமென்று விரும்பினார். அவர் இறக்கும் தருவாயில் சோவியத் தலைவர்களுக்கு பின்வரும் கடிதத்தை எழுதினார். அன்று அவர் எழுதிய எழுத்துகள் இன்று உண்மையாக்கப்பட்டிருக்கின்றன.

"என் அன்பார்ந்த தோழர்களே! நான் விடைபெற்றுக்கொள்கிறேன். சோவியத் யூனியன் உலகில் மிக்க பலம்பெற்று, தனது நண்பனும், கூட்டாளியுமாகிய சுதந்திர சீனாவோடு, அடிமைப் படுத்தப்பட்ட மக்களின் விடுதலை போரில் தோளோடு தோளாய் வெற்றியை நோக்கி முன்னேறும். அந்நாளை நான் நம்பிக்கையுடன் எதிர்பார்க்கிறேன்" என்று அக்கடிதத்தில் எழுதினார்.

மனித குலத்தின் தலைவன், சோவியத்தின் நண்பன், மறைந்தான். ஆனால் அவன் அளித்த ஊக்கம் இன்னும் அழியவில்லை. என்றும் அழியாது.

# ★ தேசபக்தனின் டயரி ★

### ஐயோ 'பாரததேவி'யே!

"சமீபத்தில் ஜனங்களிடம் கம்யூனிஸ்ட்கள் உதைபட்டதை (மாக்ஸ்வெல்) எடுத்துக் காட்டுகிறார். தோழர்களுக்கு நாட்டில்இப்பொழுதுஉள்ள செல்வாக்குக்கு இதைவிட அத்தாட்சி வேறு எதுவும் வேண்டியதில்லை".

'பாரததேவி' தலையங்கம். 1-3-'44.

"கிராமங்களிலிருந்து மாட்டு வண்டிகளிலும், படகுகளிலும் கூட்டம் கூட்டமாகக் கிராமவாசிகள் நூற்றுக்கணக்கில் வந்துகொண்டிருக்கிறார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் கால்களை நம்பி பலமைல்கள் தூரத்திலிருந்து நடந்தே வருகிறார்கள், பதினாயிரம் ஸ்திரீகள் உள்பட ஒரு லட்சம் பேர்கள் (பெஜவாடாவில் நடைபெறும் கிசான்) மஹாநாட்டில் கலந்துகொள்ளுவார்கள்".

—பாரததேவி: 9-3-44 செய்தி, பக்கம் 4, பத்தி 2.

★

"அகில இந்திய கிசான்சபை கம்யூனிஸ்ட்களின் ஸ்தாபனம்".

—சில 'தேசிய' பத்திரிகைகள் அபிப்பிராயம்.

### ஸஹஜானந்தா சூடு!

"அகில இந்திய கிஸான்சபையில் கம்யூனிஸ்ட்கள் ஆதிக்கம் செலுத்தி, அதைத் தங்களுடைய பிரசாரமேடையாக உபயோகப்படுத்திக்கொள்ளுகிறார்கள் என்று சொல்வதைக் கேட்கக் காது புளிக்கிறது. அவ்விதம் இருப்பதாக இருந்தால், அந்த வினாடியே நான் அதைவிட்டு வெளியேறுவேன்; அல்லது சமயத்திற்கு உகந்த முறையில் நடந்துகொள்ளுவேன்.

நான் பேசுவதெல்லாம் கிஸான் சபையின் கொள்கை, என்னுடைய கொள்கை. என்னையோ அல்லது கிஸான் சபையையோ உபயோகப்படுத்திக்கொள்ள எந்தக் கக்ஷியையும் நான் ஒருக்காலும் அனுமதிக்க மாட்டேன். விவசாயிகளுக்கு சேவை செய்வது என்ற லக்ஷியத்திலேதான் எனக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும் உறவு இருக்கிறது; எந்த விதமான அரசியல் உறவிலும் நான் அவர்களுடன் இருக்கவில்லை".

—சுவாமி ஸஹஜானந்த சரஸ்வதி, தலைவர் அ. இ. கிசான் சபை அறிக்கை 12-3-44.

★

### ரயிலில் நெருக்கடி!

"கிசான் மஹாநாட்டுக்கு ஐந்நூறு பிரதிநிதிகள் (பலதிசைகளிலிருந்து) வந்தபோதிலும் ரயில்வே போக்குவரத்தில் அதிக நெருக்கடி ஏற்பட்டுவிடும்".

—மாக்ஸ்வெல், மத்திய சட்ட சபையில்.

"12-3-44 ல் மாலை சென்னை சென்ட்ரல் ஸ்டேஷனுக்குப் போனேன். பம்பாய் மெயில் புறப்படுவதற்கு தயாராக நின்றது. போலீஸ் பாதுகாவலுடன் திருவாங்கூர் மஹாராஜாவும், மஹாராணியும் ரயிலில் ஏறினார்கள். மூன்று பெரிய முதல்வகுப்பு தனிவண்டிகள் அவர்களுக்காக ஒதுக்கிவைக்கப்பட்டிருந்தன". (!)

—நமது நிருபர்.

★

## —— விடுதலைப் போரில் ——

# அல்ஜீரிய முஸ்லிம்கள் 3 லக்ஷம் பேர்கள் தயார்

*[பிரெஞ்சு ஏகாதிபத்தியத்தின் அடிமைநாடுகளுள், அரேபிய முஸ்லிம் நாடுகளில் ஒன்றாகிய அல்ஜீரியாவும் ஒன்று. பாசிஸத்தை எதிர்த்து உலகமக்கள் நடத்தும் இந்த விடுதலைப் போரில், அல்ஜீரிய முஸ்லிம் மக்கள், தங்களுடைய விடுதலைப் போரை எவ்விதம் நடத்துகிறார்கள்?]*

"1789-ம் வருடம் உணவுப் பொருள்களை அனுப்பி, பிரெஞ்சு புரட்சிக்காரர்களுக்கு அல்ஜீரியமுஸ்லிம் மக்கள் உதவினார்கள். அந்த மக்களின் ஜனநாயக உரிமைகளை வழங்குவது என்ற அடிப்படையில், பிரான்ஸை விடுவிப்பதற்கு, இன்று கூட அந்த மக்களின் தேசபக்தி, போராட எழும் சோவியத் யூனியனில் வாழும் முஸ்லிம் மக்களைப் போல அதே உணர்ச்சியுடனும், உறுதியுடனும் எதிரியை எதிர்த்துப் போர் புரியக்கூடிய மூன்று லக்ஷம் முஸ்லிம்களைக் கொண்ட இராணுவத்தை நம்மால் அனுப்ப முடியும்" என்று அரேபிய கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் லார்பி பௌஹாலி, சென்ற வருடம் ஆகஸ்ட் மாதம் ஹுசேன்டே என்ற இடத்தில் நடந்த, அல்ஜீரிய கம்யூனிஸ்ட் கட்சியின் மஹாநாட்டில், பேசினார். 200 பிரதிநிதிகள் பிரசன்னமாயிருந்தனர். அதோடு பிரெஞ்சு கம்யூனிஸ்ட் கட்சி, மொராக்கோ கம்யூனிஸ்ட் கட்சி, டுனிஸ் கம்யூனிஸ்ட் கட்சிகளின் பிரதிநிதிகளும் வந்திருந்தனர்

"முதலாளிகளும், நிலச் சுவான்தார்களும் ஹிட்லருடன் சேர்ந்துவிட்டார்கள். (அவர்கள்தான் நம்மை அடிமையாக வைத்திருப்பவர்கள்) அவர்களுடன் நாம் ஒற்றுமை வேண்டவில்லை; அது வேண்டவும் வேண்டாம். ஆனால் பிரெஞ்சு பொது மக்களுடன் ஒன்று சேர்ந்து, நம்முடைய விடுதலையை நாம் அடைவோம்" என்று தோழர் லார்பி பௌஹாலிமேலும் கூறினார்.

வால்டெக் ரோசே என்ற பிரெஞ்சு கம்யூனிஸ்ட் கட்சி பிரதிநிதி, "அல்ஜீரிய மக்களின் உரிமைகளுக்காக நம் கட்சி போராடும். மனிதனை மனிதன் சுரண்டி வாழ்வதை எதிர்ப்பதே கம்யூனிஸ்ட்களின் வேலை. ஒரு தேசம் இன்னொரு தேசத்தின் ஆதிக்கத்தால் சுரண்டப்படுவதை நாங்கள் ஒரு காலத்திலும் ஒப்புக்கொள்ளவில்லை என்று முஸ்லிம் மக்களுக்கு நாங்கள் உறுதி கூறுகிறோம்" என்று பேசினார்.

அந்த மஹாநாட்டைப்பற்றி ரிப்போர்ட் செய்யும்போது, பிரெஞ்சு கம்யூனிஸ்ட் கட்சிப் பத்திரிகையாகிய லிபர்தே (Liberte) யின் நிருபர் கீழ்கண்டவாறு எழுதுகிறார்:—

"மஹாநாட்டுப் பந்தல் செங்கொடிகளாலும், பிரெஞ்சு தேசியக் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது."

"45 மாதங்களாக நம்கட்சி அங்கு சட்டவிரோதமாகவிருந்தது. கட்சிக் காரியதரிசி தோழர் உமர் ஊஜ்கான், தோழர் லார்பி பௌஹாலி, தோழர் ஜீனதி முதலிய நூற்றுக்கணக்கான தோழர்கள், விச்சி ஆட்சியால், சிறையிலடைக்கப்பட்டனர். கொலைகாரர்களைப் போல் நடத்தப்பட்டு நாம் தண்டிக்கப்பட்டோம். எனினும் அல்ஜீரிய முஸ்லிம்களையும், யூதர்களையும், ஐரோப்பியர்களையும் ஒன்று திரட்டி ஹிட்லரையும், விச்சி துரோகிகளையும் எதிர்க்கும் பணியில் நம் கட்சி தீவிரமாக வேலை செய்தது."

அல்ஜீரிய தொழிலாளர்களுக்கு கூலி உயர்வு, சோல்ஜர்களுக்குக் கூலி உயர்வு, சர்க்கார் காரியாலயங்களில் அரேபியர்களுக்கு வேலை, அரேபியர்களுக்கும் பிரெஞ்சுக்காரர்களுக்கும் இடையில் எந்த விதமான வித்தியாசங்களும் இருக்கக்கூடாது என்பனவற்றை அந்த மஹாநாடு கோரிற்று. நாளுக்குநாள் அரேபிய முஸ்லிம் மக்களுடைய ஸ்தாபனங்கள் வளர்ந்து வருகின்றன. பொது லக்ஷியத்திற்காக பிரெஞ்சு மக்களும், அல்ஜீரிய முஸ்லிம் மக்களும் நெருக்கி ஒன்றுபட்டு வருகிறார்கள்.

சுதந்திர அல்ஜீரியா நீடூழி வாழ்க!

சுதந்திர பிரான்ஸ் ஓங்குக!

# "கந்தன் காட்டும் வழி"

## ★ நேரில் கண்டவர் விமர்சனம் ★

*[தோழர் M. G. தஸ்தகீர் கோவை ஜில்லா, அவனாசி போஸ்ட், தேவராயம்பாளையம் போர்டு முகமதியப் பாடசாலையில் ஒரு உபாத்யாயர். இவர் 7—3—44-ந் தேதியன்று திருப்பூர் கஜலக்ஷ்மி தியேட்டரில் சென்னை புதுமைக் கலா மண்டலத்தாரின் "கந்தன் காட்டும் வழி" என்ற நாடகத்தைக் கண்ட பின் கீழ்கண்ட விமர்சனத்தை நமக்கு எழுதி அனுப்பியுள்ளார்.]*

"21-2-44 ந் தேதியே திருப்பூரில் நாடகம் நடைபெறுமென்று தெரிந்து வந்தேன். ஆனால் ஏமாற்றமடைந்தேன். நாடகம் ஒத்திவைக்கப்பட்டதாக அறிந்தேன். பின் 7-3-44 நாடகத் தேதி என்று அறிந்து மறுபடியும் புறப்பட்டேன்.

"நாடக தினத்தன்று பகலெல்லாம் ஒரே மழை. ஆயினும் 2 மைல் தூரம் நடந்து, மழையில் நனைந்து கொண்டே பஸ்ஸைத் தேடிப் பிடித்து ஏறி திருப்பூர் வந்து சேர்ந்தேன்.

"சரியாக இரவு 10 மணிக்கு நாடகம் ஆரம்பம். கதை எப்படி, நடிப்பு எப்படி என்று ஒரே ஆவலாயிருந்தேன்.

"முதல் சீன்—வெள்ளத்தால் குடும்பங்கள் மூட்டை முடிச்சுகளுடன் வெளியேறும் காட்சி. இதைக் கண்டு மூக்கின்மேல் விரலை வைத்துக்கொண்டு உட்கார்ந்து விட்டேன். தமிழ்நாட்டு கம்யூனிஸ்டுக் கட்சிக் காரியதரிசி, கந்தல் பாயுடன், திறந்த மார்புடன்—

"வத்தாலும் வந்ததப்பா
பாழாப்போன கொள்ளை வெள்ளம்
எம் பெண்டாட்டி பிள்ளைகுட்டி
பிழைக்க வழி என்னசெய்ய—
கடவுளே......"

என்று பாட்டுப் பாடி வந்தது என்னை திக்பிரமையடையச்செய்துவிட்டது. ஒவ்வொரு சீனிலும் ஆச்சரியத்திற்கு மேல் ஆச்சரியம்! நான் எதிர்பாராத முறையில்—கற்பனை செய்யாத வகையில் உணர்ச்சி, தேசபக்தி, ஹாஸ்யம், சோகம் எல்லாம் நிறைந்திருந்தது.

நாடகத்தில் எந்த பாகத்தையும் குறைகூற முடியவில்லை. 10 வயது சிறுவன் அப்பனின் 'வங்கம் பாரடி' பாட்டு என்னையறியாது என் கண்களில் தண்ணீர் துளிதுளிக்கச் செய்தது. M. R. ராமதாஸின் பாடல்கள் உள்ளத்தை உருக்கின.

சுதந்திர பஜனையின்போது உணர்ச்சியின் உச்சாணிக் கொம்புக்கு உந்தப்பட்டோம். ஹாஸ்யத்திற்கு ஒன்றும் குறைவேயில்லை.

கலெக்டர் தன்னைப் பார்க்கவந்த தொழிலாளர் தூதுகோஷ்டியிடம், மிஷினையும், மில்லையும், உற்பத்தியையும்பற்றி உங்களுக்கென்ன தெரியும் என்று கேட்டதற்கு, தூது கோஷ்டியில் வந்த ஒரு தொழிலாளி "உற்பத்தியைப்பற்றி தொரையே, எங்களுக்குத் தெரியாதுன்னா தொரையே, வேறு யாருக்கு தெரியும் தொரையே; மிஷின் தொரையே; எங்க கிட்ட கண்ணுக்குட்டி மாதிரி தொரையே; கக்கூஸாலே தொரையே; ஒரு நிமிஷம் லேட்டாச்சின்னா தொரையே உற்பத்தி குறைஞ்சிடும் தொரையே," என்று வார்த்தைக் கொருமுறை 'துரையே' போட்டது சபையோரிடையே பலத்த கர கோஷத்தையும், சிரிப்பையும், ஆரவாரத்தையும் கிளப்பிற்று.

என்னுடன் நாடகம் பார்க்கக்கூட வந்திருந்த திருப்பூர் முஸ்லீம் லீக் கமிட்டி மெம்பர் ஒருவர் கூறினதைக் கேளுங்கள்:—

"தெரியாமலா பொதுஜனக் கட்சி கம்யூனிஸ்டுக்கட்சி என்று சொல்லப்படுகிறது. அரசியல் ஸ்தம்பிப்பைத் தீர்க்க இது ஒரு நல்ல முறை. உற்பத்தியைப் பெருக்க, கந்தன் காட்டும் வழியே சரியானது. நான் என்னவோ என்றிருந்தேன்; இப்பொழுது தெரிகின்றது" என்றார்.

நாடகம் சுமார் 4 மணி நேரம் நடந்தது. இடையில் "இண்டர்வெல்" கூடக்கிடையாது. ஜனங்கள் அசைய வேண்டுமே ஒருவர் கூட எழுந்து செல்லவில்லை.

இங்கு (திருப்பூரில்) நடைபெறும் எந்த நாடகமும் போலீஸ் பந்தோபஸ்தின்றி நடைபெறுவதில்லையாம். ஆனால் இக்கலா நிகழ்ச்சியில் போலீஸ் பந்தோபஸ்து ஒன்றும் கிடையாது.

கடைசி வரையில் ஜனங்கள் ஒழுங்காக இருந்து ரசித்துவிட்டுச் சென்றனர்,

M. G. தஸ்தகீர்

[இந் நாடகம் 5-3-44ந் தேதியன்று கோவையில், முனிசிபல் ஹைஸ்கூல் மைதானத்தில் நடைபெற்றது. இந் நாடகம் நடந்த மற்றெந்த ஊரிலும் இவ்வளவு ஜனங்கள் திரண்டது கிடையாது. சுமார் 7000 பேர் தொழிலாளிகளும் ஜனங்களும் வந்திருந்தனர். வந்திருந்த பெண்கள் 400. சுமார் 50 வாலண்டியர்கள் நாடகத்திற்கு வந்த ஜனங்களை ஒழுங்காக உட்காரச் செய்து அமைதி குலையாமல் காத்தனர். நமது விசேஷ நிருபர்]



## கவிதையே!

(1) கடலையும் மலையையும் பாடிப்பாடி—உன்
காலத்தை கழிக்கவே எண்ணினாயோ
விடவில்லை உனை அந்த பாசிஸப்பேய்
விரட்டியே வருகுது வேட்டை நாய்போல்

(2) உலகத்தை அழிக்கவரும் பாசிஸபேய்
உனைமட்டும் விட்டுவிடும் என்றே எண்ணி
நிலைகுலைந்த மக்களது நரகவாழ்வை
நினையாமல் கழித்தனையோ கவிதையே நீ
அலைவிசையில் அகப்பட்ட அல்லிபோலே
அலக்கழிக்கப்படுகின்ற அந்த ஓர்நாள் *
(உனைப் போற்றிய)
புலவர்களும் அறிஞர்களும் கலைஞர் தாமும்
போய்விடுவார் நீ தனிப்பாய் என்பதுண்மை

(3) கடவுளரைப் பாடுகின்ற கவிதைத் தாயே
காதலரைப் போற்றுகின்ற கவிதைத் தாயே
கடலையும் பேர் அலைகளையும் பாடுவாயே
காடுகள் சூழ் மலைகளையும் பாடுவாயே
உடலையும் தன் உயிரையுமே பணயம்வைத்து
உனைக் காக்க ஆயிரம்பேர் கோடிப்பேர்கள்
துடிதுடிக்க உயிர்சிந்த ரத்தம் சிந்தி
துரும்பெனவே தூசெனவே மடிகின்றார்கள்

(4) கல்லையும் புல்லையும் பாடினாய்—உன்
கடவுளைப் பாடினாய் மக்களைக்
கொல்லும் அரக்கனை சபித்திலை—உயிர்
கொடுத்தவர் தமக்கும் நீ இரங்கலை

(5) மண்ணையும் பெண்ணையும் பாடினாய்—உன்
மாதவன் தன்னையும் பாடினாய்
உண்ணும் சோற்றினை அளிப்பவன் உழவர்க்
குற்ற துயர்க்கு நீ வருந்திலை

(6) ஏழைகளை அழிக்கவரும் அரக்கர் கூட்டம்
எரிகவென மடிகவென பாடுவாயோ—நம்
தோழர்களை அழிக்கவரும் அரக்கர் சேனை
தொலைகவென அழிகவென பாடுவாயோ
கோழைகளாய் பிறர் உழைப்பில் வாழுகின்ற
கொலைகாரர் கெடுகவென பாடுவாயோ—உடன்
வாழ்வோரை வஞ்சித்து வாழுகின்ற
வஞ்சகர்கள் மாள்கவெனப் பாடுவாயோ.

*குறிப்பு:—பாசிஸம் கொல்லப்பட்ட பிறகு அதன்மேல் அமைக்கப்படுகிற மக்கள் அரசாங்கத்தின் காலத்தில்.

—மா. கோலப்பிள்ளை, கடுக்கரை
(தென் திருவாங்கூர்).

Edited, Printed and Published by P.RAMAMURTHI at the "Janasakthi" Press 1/6 Davidson Street, G. T. Madras.